கழக வெளியீடு—௧௪௰

# மகிழ்நன்
# ஆராய்ச்சிக் கட்டுரைகள்

மகிழ்நன்
எழுதியன

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி & சென்னை
வியய—ஆவணி

# முன்னுரை

இந்நூலிலே தொகுக்கப்பெற்ற கட்டுரைகள் அனைத்தும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரால் பத்தாண்டுகளாக வெளியிடப்பெற்றுவரும் 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் திங்கள் தாளிற்கு யான் இடையிடையே எழுதி வந்தன வாகும்.

இக்கழகத்தார் இக்கட்டுரைகளை ஒன்றாய்த் திரட்டி நூல் வடிவமாக வெளியிடுகின்றமையால் இதன்கண் இப்போது இன்றியமையாத சிற்சில சீர்திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன.

பண்டைத் தமிழ் இலக்கியங்களையும் தமிழர் கருத்துக்களையும், தற்கால அறிவுநூற்கருவி கொண்டும், உலகியல் உண்மையறிவு கொண்டும் ஆராய்வதில் புதியதொரு முறை இவற்றின்கண் கற்பிக்கப்பட்டிருக்கின்றதென்பதனை இதனைப் பயில்வோர் தாமே நன்கு அறிவர். ஆகவே இதனைக் கற்பவர் புதியமுறையில் ஆராய்ச்சி செய்யும் அறிவுத்திறனைப்பெறுவர் என்பது அங்கையின் நெல்லியாம்.

இந்நூற் கட்டுரைகள், கற்றார் கல்லாதார் ஆகிய இரு திறத்தினார்க்கும் பயன்படும் பெற்றிகண்டு, செந்தமிழ்ச் செல்வியைப் பயிலும் அறிஞர் பலரும் இவற்றையெல்லாம் ஒருசேரத் தொகுத்து ஒரு நூலாக வெளியிடல் வேண்டுமென்று என்னையும் இக்கழகத்தாரையும் கேட்டுக் கொண்டதற்கிணங்கி அவற்றை இங்ஙனம் வெளியிடத் துணியலானேன். இதனை வெளிப்படுத்தி அவ்வேண்டுகோளை நிறைவேற்றிய கழகத்தினார்க்கு எனது நன்றி உரியதாகின்றது.

இக்கட்டுரைகளில், கலித்தொகையில் ஒரு கதை, அகம் புறம் என்னும் இரண்டும் தமிழ் இலக்கியப் பகுதியிலும்; முற்காலமும் தற்காலமும், இறந்த நாட்கள் என்னும் இரண்டும் சிந்தனைப் பகுதியிலும்; மொழிகள் வெளியிடு முண்மை, நிலங்களின் தட்பவெப்ப வேற்றுமையால் மொழி நடை மாறல் என்னும் இரண்டும் மொழியாராய்ச்சிப் பகுதி யிலும்; மங்கை பங்கன், வண்ணாரப் பெரியாண்டி என்னும் இரண்டும் தத்துவப்பகுதியிலும்; கடலும் கடலையும், அரஞ் செய விரும்பு, யதார்த்தவாதி உலகவிரோதி என்னும் மூன்றும் நகைச்சுவைப் (Humour) பகுதியிலும் அடங்கும்.

இந்நூற கட்டுரைகளி லெல்லாம் கறபவர்க்குக் கழிபேருவகை உண்டாமாறு நகைசசுவை கலந்திருக்கின்ற தென்பது குறிப்பிடத்தக்கது. எனினும் நகைச்சுவையே முழுதும் பயக்கும் அப்பகுதிக் கட்டுரைகள் மட்டுமே கறபோர்க்கு இன்பச்சுவை மீதூருமாறு மறறப் பகுதி கட்கு இடையிடை தனித்தனிச் சேர்ககப் பெற்றிருக் கின்றன.

ஆங்கிலமொழியில் நல்லிசைப் புலவாகளான ஸ்டீல் (Steele), அடிசன் (Addison), கார்லைல் (Carlyle), கோல்ட் ஸ்மித் (Gold-Smith), முதலியவர்கள் சொற்சுவை பொருட் சுவை நகைச்சுவை நிரப்ப எழுதிய கட்டுரைகள் அம் மொழி பயிலும் மாணவர்கட்கு உவகையூட்டிப் பயன் படுவன போலத் தமிழ் பயிலும் மாணவர்கட்கு இந்நூற் கட்டுரைகள் பயன்படுமென்று கருதுகின்றேன். இதனைக் கல்லூரித் தலைவாகளும், தமிழாசிரியர்களும் மாணவர் கட்குப் பாடபுத்தகமாக ஏற்று உதவி, என்னை ஊக்குமாறு அவாகளைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

மகிழ்நன்.

# பொருளடக்கம்

மகிழ்நன்

# ஆராய்ச்சிக் கட்டுரைகள்



## க. கலித்தொகையில் ஒரு கதை

"வெளியே போய்ப் புழுதியில் விளையாடித் துணியை அழுக்குப் படுத்திக்கொண்டு வீட்டுக்கு வந்தால் உன்னை நன்றாய் அடிப்பேன்" என்று ஓர் அன்னை பல்லைக் கடித்துக் கொண்டு, எழுவயதுடைய தன் இளமகளின் கூந்தலில் ஒரு மாலைப்போது பூவைச் சூடுங்கால் கூறினாள். அப்பொழுது அச்சிறுமியின் முகத்தில் தோன்றிய குறியை எவரேனும் பார்த்திருக்கக் கூடுமாயின், அன்னையின் அறிவுரையின் படி நடக்க அவளுக்கு எண்ணமில்லை யென்று திண்ணமாய்ச் சொல்லி யிருப்பர். பார்த்தவரை ஈர்க்கக் கூடிய இனிய முகமும், பெரிய கரிய கண்களுமுடைய இச்சிறுமி அன்னையின் உரையை மிக மதிப்பவள்போல விரைந்து சில வேலைகளைச் செய்துவிட்டுத் தாயின் கவனம் வேறு துறையிற் சென்றவுடன் மெதுவாக நடந்து, திருமகள் உருவம் பதிக்கப்பெற்ற தன் வீட்டின வாயிலில் வந்து நின்றாள். அத்தருவாயில் அண்டை வீட்டு வாயிலிலிருந்து வெளியே எட்டிப்பார்த்த நாச்சி என்னும் இளமகள், "வள்ளி! வா, விளையாடலாம்" என்று ஓசையின்றி உதட்டாலுங் கண்களாலுந் தெரிவிக்க, "நீ முன்னே போ, நான் பின்னே வருகிறேன்" என்று வள்ளி குறிப்பால் அறிவித்து, இறுதியாய் ஒரு முறை, தான் வெளியே போகிறது அன்னைக்குத் தெரிகிறதா என்று பார்த்துவிட்டுப் படிக்கட்டுகளைத் தாண்டிக்

குதித்துத் தெருவழியே ஓடிச் சிறிது தூரத்திற்கப்பால் காத்திருந்த நாச்சியுடன் கூடினாள். இருவரும் அதிக அன்புடன் ஒருவர் தோளின்மேல் ஒருவர் கைபோட்டுக்கொண்டு மேற்சென்று, வேறு சிறுமியர்களோடு கூடிப் பன்னிறம் பொருந்திய நூல்களால் கட்டப்பெற்ற பந்தை எடுத்து ஆடத் தொடங்கினார்கள்

இம்மதிமுகச் சிறுமியர் பந்தை ஒருவர்மே லொருவர் எறிந்தும், ஓடிப் பிடித்தும் வீழ்ந்தெழுந்தும் சிரித்துக் கண்ணீர் சிந்தி ஆடிக்களைத்தபின், முல்லையி னரும்புகளை யொத்த பற்கள் வாய்ந்த வனப்பையுடைய ஒருத்தி, "நாம் வீடு கட்டி விளையாடலாம் வாருங்கள்" என மொழிந்தாள். எல்லோரும் இதற் குடன்பட்டு இளைஞர் அறிவிற்கேற்ப மண்ணிலொரு சிறுவீடு அமைக்கலாயினர். உடையும் உடலும் புழுதியா லழுக்காவது கண்டும் அதனைப் பொருட்படுத்தாது, ஒருத்தி மணலைக் கொண்டுவந்து குவிக்க, மற்றொருத்தி அருகிலிருந்த ஒரு குட்டையி லிறங்கித் தன் சிறிய கைகளால் நீரை முகந்துகொண்டு வந்து கொட்ட, வேறொருத்தி "நீங்கள் கடைக்குப் போய் அரிசி, பருப்பு, காய் வாங்கிக்கொண்டு வாருங்கள்" என்று ஏவப், பிசைந்த மண்ணைக் கையிலெடுத்து வள்ளி வீடு கட்டலானாள். கூரை என்பதில்லாது இவர்களமைத்த வீட்டில் சமையலறை, பள்ளியறை, உக்கிராணவறை என்று பல வகுப்புக்களிருந்தன. கடைக்குப் போய் வருவதாகப் பாவனை செய்த பெண்மணிகள், சிறிது தூரத்திற் கப்பாலுள்ள ஒரு தோட்டத்தின் நடு வேலியைக் குறுகி யங்கிருந்த செடி கொடிகளினின்று காய்களைக் கருத்துடன் பறித்து மடியிற் சேர்த்தார்கள். அவர்களுளொருத்தி அத்தோட்டத்தினொரு மூலையில் ஓங்கி வளர்ந்த மாமரத்தின் உச்சியில் வெய்யவனின் ஒளி

பட்டு ஒரு புறஞ் சிவந்து கண்ணிற கினியதாய்த் தொங்கிய மாங்காய்களைப் பார்த்து, அதைப் பறித்துத் தின்றால் நன்றா யிருக்கும் என்று மற்றவர்களுக்குக் காட்ட, அவர்களும் அண்ணாந்துபார்த்து எப்படி அதைப் பறிப்பதென்று மயங்கி நின்றார்கள். ஓரிடத்தில் மறைந்து நின்றுகொண்டு அவர்க ளெறிந்த கற்கள், மாங்காயிருக்கு முயரத்திற் பாதியளவும் எட்டவில்லை. தோட்டக்காரன் வந்து பிடித்துக் கொண்டா லென்செய்வது என்ற அச்சம் அவர்களுக்குண்டாயிற்று.

இந்தவேளையில், அழகிய பட்டுக்கரையுடை யொன்றை இடையிற் கட்டி, மல்லிகைபோல வெண்மையான துண் டொன்று தலையில் இலங்க, இளஞ்சூரியனை போன்ற மேனி யுடையனாய்க் குதித்துக் குதித்து நடந்து பாடிக்கொண்டு வந்த முருகன் அங்குத் தோன்றினன். வேலியோரத்தில் நின்ற சிறுமியர் முருகனைக் கண்டு உவகைகொண்டு சைகை செய்து அவனைத் தங்களிடம் வரும்படி யழைத்தார்கள். அவன் அவர்களைக்கண்டவுடன் முன்னினுமதிகமாகப் பாடி யாடி நடந்து அவர்கள்முன் 'தொப்' என்று வந்து குதித் தான். இதன்பின் அவன் குறும்பு நிறைந்த பார்வையுடனும், எவரையும் மகிழ்விக்கும் புன்முறுவலுடனும், "நாச்சி என் பெண்டாட்டி, உனக் கென்ன வேண்டும்?" என்று கேட்க, அவள் முகஞ் சுளித்துக் கடுஞ்சொற் கூறலானாள். அவன் அதை ஒரு சிறிதும் கவனியாதவனாய் மற்றவர்களை விளித்து, "உங்களுக் கென்ன வேண்டும்?" என்று வினவி நகைத்தான். கொஞ்சநேரம் பெண்க ளொருபுறமும் முரு கன் மறுபுறமும் ஒருவரை யொருவர் பலவாறு வைது வாழ்த்தி முடிந்தபின், ஒரு சிறுமி மாங்காயைக் காட்டி, "அதை அடித்துத் தா" என்று சொன்னாள். முருகன் உடனே நாலைந்து கற்களைத்தேடி எடுத்துக்கொண்டு வந்து

ஒன்றன்பின்னொன்றாய் அவைகளை வீசினான். இரண்டுமூன்று காய்கள் விழுந்தன. சிறுமிய ரோடி அவற்றைக் கவர்ந்தனர். இதற்குள் கல் விழுஞ் சத்தங்கேட்டுத் தோட்டக் காவற்காரன், "அடி, பிடி" என்று கூச்சலுடனே வந்தான். முருகனுஞ் சிறுமியரும் ஓட்டம் பிடித்தனர். தோட்டத்தை யடுத்திருந்த தினைக்கொல்லையொன்றில் நுழைந்து மறைந்து, வேறொரு பக்கமாகச் சுற்றிக்கொண்டு முருகனுஞ் சிறுமியரும் சிறுவீடு கட்டுவதிற் கருத்தா யிருந்த வள்ளி யிருக்குமிடத்திற்கு வந்துசேர்ந்தார்கள். பெண்களுடன் முருகன் வருவதைத் தூரத்திலே பார்த்த வள்ளி தான் செய்து கொண்டிருந்த வேலையை நிறுத்திச் சிறிது நினைவில் ஆழ்ந்தாள். எல்லோரு மருகில் வந்தவுடன் அவள் "முருகா, அன்று செய்ததுபோல் நான் கட்டிய வீட்டை மிதித்தால் எனக்குக் கோபம் வரும்" என்று ஆள்காட்டி விரலை மூக்குக்கு நேரே உயர்த்தி மொழிந்தாள்.

"நாம் இரண்டு பேரும் திருமணஞ் செய்துகொண்ட பின் பெரிய வீடு கட்டி வாழலாம். கூரையில்லாத இந்த வீடு என்னத்திற்கு?" என்று முருகன் நகைத்து இயம்ப,

வள்ளி "இரு, உன் அம்மாவிடம் வந்து சொல்லுகிறேன்" என, "கணவனுக்கு மிஞ்சிப் போவாயோ?" என்று முருகன், மனைவியின்மேல் சீறி விழுகின்ற கணவன் போல் நடக்க, பெண்களெல்லாஞ் சேர்ந்துகொண்டு, "முருகா, முட்டாள் பயலே, உனக்கு எப்பொழுதும் இது தான் பேச்சு" என்று சுடுமொழி பல வழங்கத் தொடங்கினர். அவன் அவர்கள் சொன்னதைக் காதிற் போட்டுக் கொள்ளாது வள்ளியை நோக்கி,

"செங்கரும்பே, சீனி சர்க்கரையே" என வாயில் வந்தவா றெல்லாம் பிதற்றலானான்.

இதுகேட்டுவெகுண்டவள்ளி, இருகைகளிலும்மண்ணை எடுத்து, அவன்மேல் தூவ வந்தாள். முருகன் முன்னே பாய்ந்து பின்னே வந்து வள்ளியி னிருகரங்களையும் பிடித்து மண்ணைக் கீழே கொட்டும்படி செய்து, அவள் கூந்தலிற் புனைந்திருந்த பூவைப் பிடுங்கிக்கொண்டு, மற்றொரு பெண்ணின் கையிலிருந்த வரிப்பந்தையுங் கவர்ந்து கொண்டு, பெண்க ளமைத்திருந்த சிறு வீட்டைக் காலால் எற்றி அழித்துப் பின் திரும்பிப் பாராமல் ஓடி மறைந்து விட்டான்.

இதன்பின், சில ஆண்டுகள் சென்றன. மேல் நாம் கண்ட மகளிர், மண்ணாற் செய்த பாவைக்குப் பூவைச் சூட்டிப் பெண்ணாயப் பாவித்து விளையாடிய காலம் போயிற்று; ஆண் பிள்ளைகளுடன் அவர்கள் கைகோத்துத் திரிந்து அலைந்த நாள் நீங்கிற்று. தெருமுழுதுங் கேட்கும்படி ஏங்கியழுததும் அடங்காது சிரித்ததும் பழையநாட் பாடமாயின. கண்ட பண்டம் வேண்டுமென்று கேட்டதும், துள்ளிக் குதித்து எள்ளி நகையாடியதும் இளமையிற் கேட்ட கதைகளைப் போற கழிந்தன. அறியா இளமை நீங்கி மணப்பருவமடையும் பெண்ணின் நிலை எவ்வளவு உருக்கம் நிறைந்தது! சிறுவயது முதல் அவள் விளையாடிக் களித்து உவகை யூட்டிய நண்பா உறவினருடன் அளவளாவி யிருந்த காலம் விரைவில் முடிந்துவிடும். தம்பியருடன் சண்டை செய்து குற்றம் தன்னுடையதாகவும், தந்தையிடஞ் சென்று முறையிட்டுத் தான் தப்பிக்கொண்டு சிரிப்பதெல்லாம் நின்றுவிடும். ஒருவேளை அவள் அறியாதவிடத்தில் பழக்கமில்லாத ஒரு மகனுக்கு வாழ்க்கைப்பட்டு அவனோடு வதிய நேரலாமென்ற கருத்தைப் புகட்டுஞ் சொறகள் அன்னையின் வாயினின்றும் அடிக்கடி பிறக்கின்றன. தாய்தந்தையரையும் தமையன் தம்பிமாரையும் பிரிந்து வேறிடஞ் செல்லவேண்டுமே யென்ற எண்ணம்

உலகத் தன்மை இதுவென் றறியாத அவள் இளமனத்தை எவ்வாறு வருத்துமோ யாரறிவார்! தன்னை மணந்து கொள்பவன் எதத்தன்மையனாய் இருப்பானோ! தனது அறியாமைக்கு இரங்கித துணைவனாய நின்று தேற்று வானோ! அல்லது சீறி விழுந்து சுடுமொழி பகர்நது வருதது வானோ! கடுங்காற்று வீசிப் பெருமழை பொழிந்து மின் னல் மின்னி இடியிடிக்கும் நள்ளிரவில் நலமே யுறைவதற் கேற்ற வசதிகள் நிறைந்த வெளிச்சமுள்ள நல்ல வீட்டை விட்டுக் காரிருளிற செல்லு மொரு மகளை யொத்தவளா யன்றோ மணமாகப்போகும பெண் இருக்கின்றாள்! இவ வளவு ஐயததிலும் அச்சததிலுந திகைப்பிலும் உழலும் மகளுககு உறுதிதருவது காத லொன்றே. அஃதுளதாயின் எல்லாம் நலமாகும். பிறநதவிடம் நமக்குச் சதமன்று என்ற உண்மையை ஒரு நங்கை நமககுணாத்தும் வகை மிக அழகியது. இஃது அகப்பொருளில் ஒரு துறையாகும. மணததை எதிர்நோக்கும் மங்கையும் இறைவனோடு சேர விழையும் உயிரும் ஒருநிலையி லுளா. இதை யுளத்திற கொண்டு அகப்பொருட்பாடல்களை யோதிடின் பதி பசு பாசத்தன்மைகள் வெளியாகும்.

காதலனோடு ஒரு மகள் வீடு கடந்து காடடைந்தனள. இஃதறிநத அன்னை ஏக்கம் பிடிததவளாய்க் காதலரோடிய வழியைத் தொடரலானாள். திரிதரு மனத்தளாய் அன்னை காட்டில் வந்து அவள் தன்முன் நூலுங் கோலுங் குடை யுங் கரகமுமுடையராய்த தோன்றிய அந்தணர் சிலரைக் கண்டு, "புலன்களை வென்ற பெரியீர், இக்காட்டிடையே என் மகளைக் கூட்டிக்கொண்டு சென்ற இன்னொருத்தி மகனை நீவிா கண்டீரோ?" என்று கேட்க, அவாகள், "ஆண்களுக்குக் கூறப்படும் அழகு நிறைநத ஒரு காளை யுடன், மாட்சிமைப்பட்ட அணிகள் பூண்ட நன்மக

ளொருத்தி போவதைக் கண்டோம். கண்டு அஃதற மென்றே கருதிப் போந்தோம்" என்று கூறி, இன்னும் அவளை யாற்றுவித்தற் பொருட்டுப் பின்னுமுரைப்பார் :—

பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க் கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதா மென்செய்யும்
நினையுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே ;
சீர்கெழு வெண்முத்தம் அணிபவர்க் கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதா மென்செய்யும்
தேருங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே ;
ஏழ்புணர் இன்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதா மென்செய்யும்
சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே ;
என வாங்கு,
இறந்த கற்பினாட் கெவ்வம் படரன்மின்
சிறந்தானை வழிபடீஇச் சென்றனள்
அறந்தலை பிரியா வாறுமற் றதுவே. (பாலைக் கலி-கக)

காதல் வந்துற்றதப் பிறந்தவிடம் மறந்து ஒரு மகனுடனோடிப் போகும் மகள் மலையிலே விளைந்தும் ஆண்டுத் தங்காது மக்கள் மார்பி லிடம்பெறுஞ் சந்தனத்தை யொத்திருக்கின்றனள் என்றதில் எவ்வளவு இயைபிருக்கிறது ! இதில் உயிரையும் இறைவனையும் பற்றிய உண்மைகள் பல மிளிர்கின்றன. உணர்ந்தவர்க் கிவை உவப்பிலா இன்பந் தரும்.

மணப்பருவ மெய்திய நங்கை, தான் பிறந்த விடத்திற் பெறுமின்பமே பெரிதென்று கருதி மகிழ்ந்திருப்பாளாயின், அவள் வாழ்க்கை நிறைவுடையதாகாது. பெற்றோரது அன்பும், உடன்பிறந்தாரது துணையும், உறவினரின் ஆதரவும் மிக விரும்பக்கூடியவையாயினும், இவற்றிலேயே மூழ்கிக்கிடந்து வாழ்நாளைக்கழிப்பது பொதுவாகப் பெண்

மைக் கழகன்று. பிறந்தவிடங் கடக்கும் நாளன்றோ, அவள் மகளாய்ப் பிறந்ததின் நோக்கங் கைகூடும் நாள்! பிறந்த விடங் கடத்தல் எளிதன்று. பாலூட்டி வளர்த்த அன்னையையும், பாராட்டி வளர்த்த தந்தையையும் விட்டுப் பிரிதல் எளிதாகாது. நிலம் பிளக்க வேரூன்றி, ஓங்கி வளர்ந்த பெருமரத்தின் கிளைகளிலொன்றைத் தறித்து, வேறிடத்தில் நட்டு வளர்ப்பதை யொக்கும், ஒரு மங்கையைப் பிறந்த அகத்திலிருந்து பிரித்துப் பிறிதிடஞ் சேர்ப்பது. ஆயினும், ஒரு மகள் மருமகளாகுந் துணையு மவள் பிறந்துவளர்ந்த நோக்கம் நிறைவேறுவதில்லை.

ஆங்கிலப் புலவர் தலைவராகிய ஷேக்ஸ்பியா (Shakespeare) இயற்றிய லியா (King Lear) என்ற நாடகத்திற் குறிக்கப்படு மொரு உண்மை ஈண்டுக் கருதத்தக்கது. லியர் என்ற கிழவரசன், முதுமையால் தளர்ந்து, தன் நாட்டைத் தனது மகளிர் மூவருக்குப் பகிர்ந்து கொடுக்க வெண்ணினன். இம்மகளிருள் மூத்தவ ரிருவருக்கு மண மாகி யிருந்தது. இளையவளாகிய கார்டீலியா (Cordilia) வைக் கைப்பற்ற மன்னரிருவா காத்திருந்தனர். கிழ வேந்தன் மகளிா மூவரையுந் தன்முன் அழைத்து, "நீவிா எத்துணை யன்பு என்மீது செலுத்துகின்றீர் என்பதைத் தெளியப் பகர்மின். உங்களில் எவர் என்னை யாவரினும் மேம்பட நேசிக்கின்றூர் என்பதை அறிய விழைகின்றேன்" என்று நவின்றான். இது கேட்ட மூத்த மகளிருவரும், தந்தையன்புக் கிணையாய்த் தாங்கள் மதிக்கக் கூடியதொன்றும் இப்பேருலகிலில்லை யென்றும், தங்களன்பு உரையில் விரிப்பதற் கரிதென்றும் நயம்படப் பொய் புகன்றனர். இவ்வுரை கேட்டுப் பேருவகை கொண்ட அரசன், தனது இனிய இளையமகளைப் பார்த்து, "நமது செல்வச் சிறுமியே, உன் தமக்கையர் பெறப்போ

வதிலும் சிறந்த பங்கைப் பெறுதற்கு, நீ யாது புகல்கின்ருய்?" என, அவள், "யான் கூறக்கூடிய தொன்றுமில்லை" என்று விடையளித்தாள். சிறு மகளிடமிருந்து நயவுரை நனி எதிர்பார்த்த வேந்தன் மிகுதியும் வெறுப்புற்று, "கூறக்கூடிய தொன்று மில்லையாயின், நீ பெறக்கூடிய தொன்றுமில்லையென்பதை யறிவைகொல்!" எனச் சினந்து கேட்டான். தன் தமக்கையர் சொன்ன படிறுறுரை கேட்டு நாணிய கார்டீலியா, "தந்தையே, என்னைப்பெற்று வளர்த்த தங்களை எம்முறையில் யான் நேசிக்கக் கடமைப்பட்டேனே அம்முறையில் நேசிக்கிறேன்; இஃதுண்மை. என் தமக்கையருக்கு மணமாகியிருக்கிறது; எல்லோரினும் மேலாகத் தங்களை யவர்கள் நேசிப்பதுண்மையாயின், அவர்கள் எதற்காக மணஞ்செய்து கொண்டார்கள்?" என்று வினவ மன்னன் வெகுண்டு, அவளுக்குத தன் நாட்டிலொரு சிறுபகுதியுங் கொடாமல் அனுபபிவிட்டான். கார்டீலியா மொழிந்த உண்மையைப் பொருத மன்னன், பலவகையில் இடர்ப்பட்டு வருநதித் தவிதது, இறப்பதற்குச் சற்றுமுன், அம்மாதுநல்லாளின் அரிய பண்பை நன்கறிந்தான்.

தாய்தந்தையரின அன்பு சாலுமாயின், மணமென்பது ஒரு மகளுக்கு வேண்டுவதில்லை. காதலைப் பற்றிக் கடிந்து கூறுவது கல்விக்கு அழகென்று பிறழ உணர்ந்தவர் இதை ஆராய்வாராக. பிறந்த இடததினும் பெரிய இடமொன்றுமில்லையெனத் துணிந்தவள், தன்னைமறப்பதுமில்லை, தலைவனை யறிவதுமில்லை. இங்ஙனமே, பிறந்த இடத்தின் பற்றிற் சிக்கி, பெரிய இடம் போகும்வகை யறியாது உயிர்கள் ஒடுங்கி யிருக்கின்றன. பிறவித் தொடர்பை யறுக்கும் ஆற்றலுடைய காதலைப் புகட்டு மொரு உயர் மகன் தோன்றுமளவும், தாய்தந்தையரின் செல்வத்தையும் அன்பையுங் காட்டிலும் இனியதொன்றில்லை யென்று

மயங்கி யிருக்கும் மகளைப் போல், இறைவ னருள் காணு மளவும் உலக இன்பத்தில் உயிர் ஆழ்ந்து கிடக்கும் உயிர்க ளெல்லாம் இறைவனிடமிருந்து தோன்றுவன ஆதலால், அவற்றிற்கு இளமையிலேயே அவனைப்பற்றி உணர்ச்சி இயல்பாகவே யுண்டு. ஆனால் நாளாவட்டத்தில் பிற பற றுக்கள் வளர்ந்து அதை அடக்கி யொடுக்குகின்றன. காத லாகிய பெரும்பற்று வந்து மங்கையின் அகத்தை நிரப்பிப் பிறந்த இடத்திலிருந்தவளை ஈர்த்துப் பிறிதிடஞ் சேர்க்குந் திறமறிந்து,

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்ற குறளின் குறிப்புணர்க.

மணல் வீடு கட்டி விளையாடிச் சிறுமியர் குறும்பு பல செய்து சிரித்தவளும், காதிலுங் கழுத்திலு மிகுந்த நகையி லுஞ் சிறந்த முத்துநகை வாயிலுடையவளாய்த் திகழ்ந்தவ ளும், முருகனை முனிந்து அவன்மீது மண்ணை வீசியெறியத் துணிந்தவளுமாகிய வள்ளி, பன்னீராண்டு நிறையப்பெற்று, முன்னினும் பன்மடங் கதிக வனப்பு மினிமையும் நிறைந்து, அடக்கமும் நாணமு முடையாளாயச் செய்வன திருந்தச் செய்து அகத்தி லிருந்தாள். மாலைப்பொழுதில் வள்ளியின் கூந்தலை வாரி முடித்துப் பூச்சூடுங்கால், பல்லைக் கடித்துக் கொண்டு அன்னை கூறிய வன்மொழிகள் இனிப் பிறவா. திடுதிடுவென நடந்ததற்காகவும், செம்பு, குடம் முதலிய வற்றைத் தூக்கித் தடுமாறிக் கீழே போட்டதற்காகவும், அடுப்பிற் சோற்றைக் குழைத்ததற்காகவும், கறி கூட்டுவ தில் உப்பைக் குறைத்ததற்காகவும், இன்னும் பலவற்றிற் காகவும் அன்னை வீருந்திப்பகர்ந்த மொழிகள் நின்றுபோய் விட்டன. பெறுதற்கரிய செல்வத்தைப் பெற்றவர்போல்,

தாய்தந்தையர் அவளைப்போற்றி வளர்த்தனர். அவள் தன் அழகாலு இனிமையாலும் எல்லோர்க்கும உவகை யூட்டிஞள். இங்ஙனம் வளர்ந்த வள்ளி, இளவயதில் தன் தோழனுயிருந்த முருகனை அறவே மறந்தாள். ஆனல் முருகனை அவளை மறந்து விடவில்லை

உலகப் பொருள்களி னின்பத்தில் உயிா செம்மாந்து கிடக்கும்போது, இறைவன் அதைத் தன்பா லிழுக்க முயல்கின்ருன்; வாழ்க்கையின் அடைவுகளால் அதற்கு அறிவு புகட்டித தன்னிடமதைத திருப்பப் பார்க்கிருன்; தன் அருளையுங் கோலததையு' மதற்குக் காட்டிப் பழைய நினைவைப் புதுக்க முயற்சி செயகின்ருன். பக்குவப்படாத உயிர் இதை யறிவதில்லை. ‘உள்ளங் கவர் கள்வன்’ அவ னென்பதை உணாச்சியில்லாத உயிா எஙஙன மறியும்? இஃதெல்லாம் அகப்பொருள் களவுப பகுதியாகும்.

பிள்ளைப் பருவததில் நாம் இயறகையழகி லீடுபட்டி ருக்குமாறு முதிர் பருவததி லிருப்பதில்லை. காலும் பொழி லும் ஆலும இளவயதில் நமக்கினபமளித்தவாறு இப்பொழு தளிப்பதில்லை. நீரும நிழலும் மணமும் நமதிளமனதை யூக்கி யதை இப்பொழுது நினைத்துப் பாாததால், சிறுவா நிலையி லிருநது எவ்வளவு நாம் மாறியுளோா மெனபது தெரிகின் றது. குழவிநிலையினின்றும் நாம் வேறுபட்டிருப்பதுநன்மை பயக்குமோ தீமை பயக்குமோவென்று இறைவனைத் தவிர வேறு யாா அறிவார்? பணப்பை யொன்றையும் பூக்கூடை யொன்றையு மொரு குழந்தையின் முன் வைத்தால், ஐய மின்றிக் குழநதை பூக்கூடையையே நாடும், நாமோ பணப் பையையே நச்சுவோம். இதனுல குழந்தையைவிட நாம் அறிவிற சிறந்தவரென்று கூறல் ஒல்லுமோ? இயற்கை யழகி லீடுபடுவதா லொருவர் இறைவனின் மாட்சியை

அறியலாகும், இதனால் குழந்தைகள் கடவுளை யணுகி நிற்கின்றாரென்று கொள்வது முண்டு.

"நான் உன்னுடன் விளையாடித் திரிந்தபோது, 'நீ யார்?' என்று உன்னை நான் கேட்கவில்லை. கூச்சமும் அச்சமுமின்றி நான் துள்ளித் திரிந்து நாட்கழித்தேன்.

அதிகாலையிலே எனது கூட்டாளிபோல நீ வந்து, தூக கத்திலிருந் தென்னை எழுப்பி, காட்டிலுள்ள இடை வெளி களுக்கு நேராக உன் பிறகே நான் ஓடும்படி செய்தாய.

அந்நாளிலே, நீ எனக்குப பாடிய பாட்டின் பொருளை நான் அறியவில்லை ஆனால் அந்த இசையை நான் விட வில்லை. அவ்விசையின் சுவை, என்னுள்ளத்தைக் கூத்தா டச் செயதது

இப்பொழுது, விளையாடுங்காலம் முடிந்தபின தீடீ ரென்று என் கண்கள்முன் தோன்றும் இக்காட்சி யாது?"

[இரவீந்திரநாத டாகூர்—கீதாஞ்சலி-97]

கூச்சமும் அச்சமுமின்றி முருகனுடன் விளையாடித் திரிந்த வள்ளி, அவனை மறந்து, ஒருநாள் தன் அன்னையுடன் வீட்டிலிருநதாள். யாரோ ஒருவன் வாயிலில் வநது, "தாக மெடுக்கின்றது, தாங்க முடியவில்லை, தண்ணீர் சிறிது கொடுப்பீரோ?" என்று கேட்டது அவர்கள் காதிற பட்டது. தாகத்திறகுத தண்ணீர் கேட்பவனை, 'போ' என்று விலக்குவதெங்ஙனம்? ஆதலின் அன்னை வள்ளியை நோக்கி, "யாரோ உண்ண நீர கேட்கின்றார்கள்; செம்பில் நீர் கொண்டு போ" என்றாள். தாய் பணித்தவாறே, நிகழப்போவது இன்னதென் றறியாமல், வள்ளி செம்பு நீரைக் கையி லெடுத்துக்கொண்டு, வாயிலை நோக்கி நடந் தாள். வெளியே மறைந்து நின்றுகொண்டிருந்தவன், பிடியென நடந்து வந்த வள்ளியி னழகைத் தன்

கண்களாற் பருகி மகிழ்ந்தான். இதை அறியாதவளாய்க் கீழ்நோக்கிய பார்வையுடன் அடி எடுத்து வந்து, வாயிலையடைந்து செம்புநீரை நீட்டி நின்ற வள்ளியின் வளைகள் நிறைந்த முன்கையை, ஆத்திரக்காரனான அம்மகன் எட்டிப் பிடித்தான். ஒரு மகன் கை தன்னைத் தீண்டியதுணர்ந்த வள்ளி, துடிதுடித்து துள்ளி, "அம்மா, இவன் செய்ததைப் பார்த்தாயோ?" என்று கதறினாள். இந்த அழுகுரல் செவியிற் பட்டவுடன் அன்னையும் அலறிப் பதறியோடி வரலானாள். இதற்குள் தண்ணீர் கேட்ட மகன், தன் னுருவங் காட்டிப் புன்னகை செய்து நிற்ப, தன்முன் நின்றவன் முருகனென்பதை வள்ளியறிந்து கூசி யுள்ளொடுங்குங் கண்ணினள் ஆயினள். இத்தகைய நிகழ்ச்சிகளிற் பெண்ணறிவு கூரியதாகையால், முருகனைத் தப்புவிக்க வள்ளி உடனேயொரு சூழ்ச்சி கருதினாள். பதைத்த நெஞ்சத்துடன் விரைந்து வந்த அன்னையை வள்ளி அமைதியுடன் பார்த்து, "அன்னாய், அச்சமொழிக; நடந்தது கேள்; நீர் உண்கையில் இவன் விக்கிக்கொண்டு வருந்தினான்; அதனால் யான் அஞ்சிக் கூவினேன்" என்று நடந்ததை மறைத்தாள். யாது நேர்ந்ததோவென்று துளக்குற்ற அன்னை இதுகேட்டு அச்சந் தவிர்ந்து, விக்கினானென்று தன் மகள் கூறிய முருகனது முதுகைப் பலகால் அழித்தழித்துத் தடவினாள். இங்ஙனம் அன்னை முதுகைத் தடவும்போது, முருகன் வள்ளியைத் தன் கடைக்கண்ணாற் கொல்வான்போலே பார்த்து நகைக்கூட்டஞ் செய்தான். இவ்வரலாற்றை வள்ளி தன் தோழிக்கு நவின்றதாகக் கூறும் கலிப்பாட்டு, பின்வருமாறு:—

"சுடர்த்தொடீஇ கேளாய், தெருவிலநா மாடு
மணற்சிற்றில காலிற் சிதையா வடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி

நோதக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோர்நாள்
அன்னையும் யானு மிருந்தேமா, இல்லிரே
உண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
அடர்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழாய்
உண்ணுநீ ரூட்டிவா வென்றா ளென, யானும்
தன்னை யறியாது சென்றேனா , மற்றென்னை
வளைமுன்கை பற்றி நலியத் தெருமந்திட்
டன்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா
அன்னை யலறிப் படர்தர, தன்னையான்
உண்ணுநீர் விக்கினா னென்றேனா, அன்னையும்
தன்னைப் புறம்பழித்து நீவ, மற்றென்னைக்
கடைக்கணாற் கொல்வான்போல் நோக்கி நகைக்கூட்டம்
செய்தானக் கள்வன் மகன்.” (குறிஞ்சி—51)

பிள்ளைப் பருவத்தில் வள்ளி கட்டிய மணல் வீட்டை யழித்து மறைந்த முருகன், மறுபடியுந் தோன்றி, வள்ளி தன் தாயகம்விட்டுத் தன்னகம் வருமாறு காதலையூட்டுதல், சிற்றகத்தை யழித்துச் சீரகத்தைக் காட்டும் இறைவன் செயலுக்கொப்பாயிற்று.

* “மலர்களைத் தொடுத்தாயிற்று, மணவாளனுக்குரிய மாலை கட்டி வைக்கப்பட்டிருக்கிறது. மணமான பின், தலைவி தன் வீட்டைவிட்டுத் தனியே சென்று, இரவின் ஏகாந்தத்திலே நாயகனைச் சேர்வாள்.” (கீதாஞ்சலி—91)

* “The flowers have been woven and the garland is ready for the bridegroom. After the wedding the bride shall leave her home and meet her lord alone in the solitude of night.”

## 2. அகம் புறம்

அகம் புற மென்பது, உள் வெளி என்றவற்றுடன் ஒரு பொருளன உள் என்பது மக்கள் உளத்தையும், புறம் எனபது அதறகு அயல-வென்று கருதப்படும் மரம், விலங்கு, மலே, கடல், காற்று முதலியவற்றையுங் குறிப்ப தாககொண்டு அவறறைப்பறறிச் சிறிது சொல்ல வெழுந்தது இவ்வுரை. அகமும் புறமும் ஒன்றையொன்று தழுவியே நிறபனவாதலின் அவற்றை முரண்படுவனவாகப் பிரிததல் தவறு. அவ்வாறு பிரிததுக் கருதியதனுலன்றே நம நாட்டில் புறப்பொருளறிவு குன்றி இப்போது நாம் பெரிதும் இடர்ப்பட நேர்ந்தது? தன்னை யறியாதவன் பிறரை யறியான்; பிறரை யறியாதவன் தன்னை யறியான். இங்ஙனமே அகத்தைக்கொண்டு புறமறியப்படும். புறத் தைக்கொண்டு அகமறியப்படும். 'கதிரவன் சினந்தான்,' 'காடு களிததது,' என்று பேசுங்கால் உளததின் தன்மை புறப்பொருள்களின்மேல் ஏற்றப்பட்டது 'கல் நெஞ்சன்,' 'அக மலர்ச்சி' என்பவற்றில் புறப்பொருள்களின் தன்மை உளததின்மே லேற்றப்பட்டது. அகந் தூய்மை பெறும் நிலையைக் காட்டுவதற்கும் புறப்பொருள்கள் வேண்டும். படலம நீங்கின கண்ணை அழுக்கு நீங்கிய உயிருக் கொப் பிடுதல் வழக்கம். 'அழுக்கு நீங்கிய உயிர்' எனும்போதே அதில் புறப்பொருட்டன்மை கலந்தது. உயர்வு, தாழ்வு, மேன்மை, கீழ்மை என்ற பண்புப்பெயர்களும் நிலத்தி லுள்ள மேடு பள்ள ஏற்றத் தாழ்ச்சிகளினின்றும் பெறப் பட்டது வெளிப்படை. ஆதலின் புறப்பொருள்களைப் புறக்கணித் தகற்றல் கூடாது அங்ஙனஞ் செய்தல் தமிழர் தன்மைக்கு ஒவ்வாது. தொல்காப்பியமாகிய பெருநூலில் பொருட்பால், அகத்திணை, புறத்திணை என இரண்டாகப்

பிரிக்கப்பட்டு ஒன்றையொன்று பற்றி நிற்றல் கருதத் தக்கது. அகத்திணை கூறவந்த பண்டைத தமிழ நூல்களும் புறப்பொருளை மிக விரித்துக் கூறும். பட்டினப்பாலை முழுவதாஉம் முந்நூறறோரடிகளான் அமைக்கப்பட்டிருக் கின்றது. இவற்றுள் இருநூறறுத் தொண்ணூற் றேழடி களிற் புறப்பொருள விரியும் ஏனை நான்கடிகளில் மாத்திரம் அகப்பொருட் சுருக்கமும சொல்லப்பட்டிருக்கின்றன. இவ்வாறே திருமுருகாற்றுப்படை முதலிய செய்யுட்களிலும் புறப்பொருட் சிறப்பே பெரும்பான்மையாற கூறிவைத்து ஏனைய அகவுணாவின் திறனெல்லாம மிகச் சுருங்கவே சொல்லப்பட்டன. புறததே விரிநத அறிவெல்லாம் முறை முறையே சுருக்கப்பட்டு அகததே செல்வுழி அஃதொன் றில் மாத்திரமே உறைந்து நிற்றலிற புறப்பொருள் வழி வைதது விளக்கப்படும் அகப்பொருளெல்லாம் மிகச் சுருக்கிக்கூறுதலே மனவியறகைககு இயைந்ததாம் என்று மறைமலையடிகள் தமது பட்டினப்பாலை ஆராய்ச்சியுரையிற் கூறியது காணத்தக்கது.

புறமென்பது வெளியிலுள்ள அனைததையுங் குறிப்பது கொண்டு தொல்லைத் தமிழர் நிலததையும் அதிலுள்ள மரம் விலங்கு புள் முதலியவற்றையும் ஐம்பெருங் கூறுக்கி அவற்றின் இயல்பையும் விளக்கினா. மலையும் மலைசார்ந்த இடமும், காடும காடு சார்ந்த இடமும், வயலும் வயல் சார்ந்த இடமும், கடலும் கடல் சார்ந்த இடமும், சுரமும் அதைச் சார்நத இடமும் எனப் பகுததுக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை யென முறையே பெயரிட்டனர். இங்ஙனம் வகைப்படுத்திய நிலங்களைப் பண்டைத் தமிழர் உளத்திலெழுஞ் சில உணர்ச்சிகளுக் கிடமாக்கியது அவர் நுண்ணிய அறிவினைத் தெள்ளிதிற் புலப்படுத்தும். இதைச் சற்று நோக்குவோம். அகவுணர்வால் புறப்பொருள் மாறித்

தோன்றுவதும், புறப்பொருட் டன்மையால் அகவுணர்ச்சி வேறுபடுவதும் கற்றுணர்ந்தோர் அறிந்ததே. ஒருவன் எவ்வளவு அழுக்குத்தன்மை யுடையவனாயினும் தூய்மையான இடத்தில் உமிழத் துணியான். கடும்பசியா லொடுங்கியவன் இயற்கையில் தான் அருந்த அருசுவனவற்றையும் உண்ணக் கூசான். ஆற்றில் நீராடிக் கடவுளைத் தொழவேண்டுமென்று துணிந்தவன் வைகறையை நோக்கி மகிழுமாறு திருடப் புகுந்தவன், வைகறையை எதிர்பார்ப்பானோ? மங்களநாணும் மாளவேண்டுமென்ற துணிபுடன் சென்ற நலல தங்கைக்குத் தோன்றிய கிணறு, புதிதாய் மணம் நிகழ்ந்து தோழியர் பலருடன் நீரெடுக்கச் செல்லுமொரு மங்கை காணுங் கிணறுபோல் இருக்குமோ?

உளததிலுள்ள உணாச்சிக்கேற்ப வெளிப்பொருள்கள் மாறித தோன்றும். கணவனுள்ளவரையில் மிகுதியும் போற்றி வளர்க்கப்பட்ட உடல், அவன் போனபின் கற்புடைய மனைவிக்கு மிக்க அருவருப்பாதல் கேட்டிலார் யார்? நாளெல்லாம் உழைதது இளைதத நன்மகன், ஞாயிறு மேற்கடல் செல்வதைக் கண்ணுற்று அகமகிழநது மனைவி மக்களைக் காண வீடு செல்லுமாறு கொடும்பிணியால் வருந்து மொருவன் வெய்யவனின் செவ்வொளியைக் காண்பனோ? இனி, புறப்பொருள் அகவியற்கையை மாறறுவதற்கு எடுததுக் காட்டாகச் சில காண்பாம். ஓங்கி வளர்ந்த மலைப்புறததுத தனியே திரியும ஒருவனது எண்ணங்கள பலாசூழ மாளிகையொன்றில் அமர்ந்திருக்கும் முதலாளியின் நினைவுகளை ஒத்திரா என்பது திண்ணம். கடல் கொநதளித்தாட, புலிபோற சீறும் அலைமேற் படகை விரைந்து செலுத்தும் பரதவனது உளநிலை, சிறு குளததில் உடை தோய்த்து நிற்கும மருதநில மகனது அகப்பான்

மையை ஒக்குமோ ? செவிடுபடும்படிப் பலவகை ஓசைகள் எழுமிடத்தில் அமர்ந்தவன் அகவமைதி பெற்றிருத்த லரிது. இயற்கையில் அவன் எத்துணை அமைதி வாய்ந்தவனாயினும், இன்னொலி இடைவிடாது அவன் காதில் நுழைந்தால் சீற்றங்கொள்வான் என்பதில் ஐயமில்லை. யாதானும் ஒன்றுபற்றிச் சினந்தவன் வெளியிலுள்ள பொருள்களில் தன் சீற்றத்திற்குத் துணையானவற்றைக் காண்கின்றனேயன்றி அதைத் தணித்தற்குரியவற்றைப் பாரான். தன் மனைவிமேல் வெறுப்படைந்தவன் அவள் செய்கையிலும் பேச்சிலும் தகாதனவே காண்பான். நக்கலை அவன் கண்ணிற்கு மறையும் "மருண்டவன் கண்ணிற்கு இருண்டதெல்லாம் பேய்" என்பது பழமொழியன்றோ ? முற்றத்துறந்த முனிவர்கள் ஒருகால் அகத்தையும் புறத்தையும் பிரித்து ஒன்றிலொன்று செல்லாமற் காத்தல் கூடும். அத்தகைய பெரியோரும் அகவமைதி பெறும்பொருட்டு புறவமைதி நிறைந்த காடு, மலை, குகைகளை நாடிச் செல்வர்.

வெங்கதிர் மிகவும் வீசுந் தமிழ் நிலத்தை யொத்த நாடுகளில் வெம்மையால் மக்களுக்குப் பெரிதும் வருத்தம் நேர்கின்றமையால் வெப்பத்தை அவர் விரும்பார். காலை ஞாயிறு கடுங்கதிர் பரப்பி யாவையும் வாட்டும் நம் நாட்டிற் பெரும்பாலும் நெருப்பின் அண்மை வெறுப்பையே தரும். ஆதலின் வெப்பத்தோடு தொடர்புடைய தமிழ்ச் சொற்கள் பலவும் இன்னாப் பொருளையே குறிக்கும். சுடு, கொளுத்து, வாட்டு பொங்கு, காய், வெம்பு, எரி, புழுங்கு, வேதல், கொதித்தல், மூள்தல், புகைதல், வெயில், தீ, அனல், கனல், தழல், அழல் என்பவற்றை ஆராய்வதால் அது நன்கறியப்படும்.

"என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம்" (குறள், அன்பு—எ)

ஆதலின் உளம் நொந்து வாடும் நிலையை வெப்பத்தோடு புணர்த்திக் கூறுவது தமிழ்நிலத்திற்கு மிகவும் பொருத்த மானது. இதுபற்றி யன்றோ, காதலனுங் காதலியும் ஒரு வரை யொருவர் பிரிந்து புண்படுவதைத் தீப்போலுங் கொடிய சுரமாகிய நிலத்துடனும்,முதுவேனிலாகிய பெரும் பொழுதுடனும், நண்பகலாகிய சிறுபொழுதுடனும் பண் டைப் புலவர் சேர்த்தமைத்தார்? தலைவனைப் பிரிந்த தலைவி யின் உளம் அன்பெனும் ஈரஞ் சற்று மிலாது காய்ந்து, உலையி லூதுந் துருத்திபோல் அவள் நெட்டுயிர்த்து, உள் வெதும்பிக் கலங்கித் தனிமையுற்ற நிலைமையை உள்ளவா றுரைப்பதற்கு, 'நிழலும் நீரு மில்லாத அழல் வெங்கான மும்,' அடி கொப்புளிக்க நிலஞ் சுடுங் கோடையும், காங்கை தாங்குதற்கரிய நண்பகலும் ஒன்று கூடின.

"அரிதாய வறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப்
பிரிவெண்ணிப் பொருள்வயிற் சென்றநங் காதலர்
வருவாகொல் வயங்கிழாஅய் வலிப்பல்யான் கேளினி ;
அடிதாங்கு மளவின்றி யழலன்ன வெம்மையாற்
கடியவே கனங்குழாஅய் காடென்றா ரக்காட்டுட்
டுடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே ;
இன்பத்தி னிகந்தொரீஇ யிலைதீந்த வுலவையாற்
றுன்புறூஉந் தகையவே காடென்றா ரக்காட்டு
ளன்புகொண் மடப்பெடை யசைஇய வருத்தத்தை
மென்சிறக ராலாற்றும் புறவெனவு முரைத்தனரே ;

கன்மிசை வேய்வாடக் கனைகதிர் தெறுதலாற்
றுன்னருஉந் தகையவே காடென்றா ரக்காட்டு
ளின்னிழ லின்மையான் வருந்திய மடப்பிணைக்குத்
தன்னிழலைக் கொடுத்தளிக்குங் கலையெனவு முரைத்தனரே;
எனவாங்கு;
இனைநல முடைய கானஞ் சென்றோர்
புனைநலம் வாட்டுந ரல்லர் மனைவயிற்
பல்லியும் பாங்கொத் திசைத்தன
நல்லெழி லுண்கணு மாடுமா லிடனே," (பாலைக்கலி: ௰௧.)

இப்பாலைக்கலி அகத்தில் தோன்றிய பிரிவாற்றாமை யெனும் உணர்ச்சியைப் பெரிதும் பெருக்குதற்குரிய வெளிப்பொருட் சேர்க்கையுடன் அமைக்கப் பெற்றிருத்தல் காண்க.

"கோவலன் பிரியக் கொடுந்துய ரெய்திய
மாமலர் நெடுங்கண் மாதவி போன்றிவ்
வருந்திறல் வேனிற் கலர்களைந் துடனே
வருந்தினை போலுநீ..."

(சிலம்பு-புறஞ்சேரி, வரி: 48-51)

என்பதையும் நோக்குக. இங்ஙனம் அகத்தையும் புறத்தையும் ஒன்றவைத்தல் தமிழ் மரபு. இதுபிறநாட்டார் நூல்களிற் காணக்கூடிய தொன்றன்று. பட்டினப்பாலையில் இருநூற்றுப் பதினெட்டடிகள் காவிரியையும் மருத நிலத்தையும் செம்படவர் சேரியையும் கடலையும் நகரையும் பற்றிக் கூறுவனவாதலால், பாலையெனும் அகத்திணைக்கு அஃது ஒக்குமோவெனின், இங்குப் பிரிதல் நிகழாமையின் அது குற்றமன்றென்பதையும், பின்வரும் அடிகளில் மருதநிலம் பாழாகி நீரற்றுப் போய் மன்றங்கள் அழிந்து நரிகள் ஊளையிடும் இடமாவதைக் குறித்துக் கூறப்படுவதால், பாலைத்திணையின்

தன்மை ஒருவாறு காட்டப்பட்ட தென்பதையுங் கருத வேண்டும்.

மற்றும் பாலைத்திணையில் பிரிதலன்றிப் பிறிதொன்றுஞ் சொல்லொணு தென்றொரு வரம்பில்லை அதற்கு உடன் பட்டவற்றையுங் கூறுதல் பொருந்துமென்று முன்ஞேர் தெளிய விளம்பினராதலின், பிரியக் கருதி யொன்றுகிளத் தலும் அதன் பாற்படும். இதில் பல திணைச் செய்தி விரவி வருதல் வியப்பன்று. 'பாலை' என்ற பெயர் பால் எனுஞ் சொல்லினின்று தோன்றுவது. பால்—பகுப்பு. ஆண் பால், பெண்பால், முப்பால் என்பவற்றுல் அதை யறியலா கும் பகுப்பு—பிரிவு; ஆதலின் பாலை பிரிதற்கிடமாயிற்று இதனுடன், பகல்—பிரிதல் என்ற பொருளை யுட்கொண்டு நண்பகல் பாலைக்குப் பொழுதானமையின் பொருத்தங் காண்க. பட்டினப்பாலை முழுவதும் அகத்திற்கு இன்ப மூட்டும் அழகிய காட்சிகள் நிரம்பியுள. ஒன்றைக் கூறி மேற்செல்வாம் "வீட்டு முற்றங்களிலே உலரவைத்திருக் கும் நெல்லுக்குக் காவலாயிருக்குஞ் சிறு பெண்கள், ஒளி விளங்கு நெற்றியும் கள்ளமறியாத பார்வையும், திருத்திய அணிகலன்களும் உடையர்; இவர்கள் அந்நெல்லைத் தின்ன வருங்கோழிகளை வெருட்டும்பொருட்டு எறிந்த மகரக்குழை கள் அம்முற்றத்திற் சிதறிக் கிடந்து, அங்கே சிறு பையன் கள் மூன்று உருளை உடைய சிறிய தேரைக் குதிரையின்றி இழுத்துக்கொண்டு வருகையில், அதன் உருள்களை இடறி அச்சிறு தேர் போகாமல் வழி முன்னை விலக்குகின்றன." (பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை). இக் காட்சியைக் கண்டு உளங்குளிராதவர் தமிழ்நூல்களைக் கற்றுப் பயனடையார். உரைநடையில் இஃது உளங்கவரும் வன்மை பெற்றிருத்தலை நோக்கச் செய்யுளின் இனிமை வெளியாகும்.

ஆங்கில நூல்களில் ஆங்காங்குப் பொருத்தம்பற்றி வரும் ஒப்புமைகளின் நயத்தையும், இயற்கையழகு நவிற்சியின் திறத்தையும் மேனாட்டு மக்கள் பெரிதும் போற்றி மகிழ்கின்றார். பத்துப்பாட்டு முழுமையும் இயற்கையழகுக்கொரு களஞ்சியமாகும். எவ்வளவுதான் அருந்தினுந் தெவிட்டாத தீங்கனியனைய சுவைநிறைந்த இயற்கையழகு கண்டு மகிழ விரும்புவோர் பத்துப்பாட்டில் அதைக் கண் குளிரக் காணலாகும். உயர்கல்வி பயிலுந் தமிழ் மாணாக்கர் பலர் தாம் பாராத மேல்நாட்டுக் காட்சிகளை ஆங்கிலத்திற் படித்து அவற்றைப்பற்றிப் பலவாறு பேசி உவக்கின்றனர். ஆங்கிலப் புலவரின் நூல்களை வருந்திக் கற்குமாறு இவர்கள் பழைய தமிழ்ச் செய்யுள்களை யுணரப் புகுவரேல் இதுவரையிற் கண்டிரா இன்பத்தில் ஆழ்வர். தமிழைக் கற்பிப்போரிற் பலர் தமிழின் இனிமையைக் காட்ட வகையிலராயிருத்தல் இரங்கத்தக்கது அகச்சுவையுடைய தமிழ்ப் பாடல்கள் உணர்ச்சி வகையான் ஊட்டப்படுமேயன்றி அறிவு வகையாற் புகுத்தப்படா. உண்மை இங்ஙனமிருப்ப, தமிழ்ப்புலமை யுடையோரிற் பெரும்பாலர் எழுத்துக்கூறு, சொற்கூறு முதலியவற்றைப் பெரிதும் பாராட்டிக் கற்பவரை அலைகின்றனரேயன்றிப் பொருட்சுவை காட்டி மகிழ்விப்பதில்லை. சிறியேனுக்குத் தமிழ் புகட்டிய பெரியார் ஒருநாள், வகுப்பிலுள்ள பிள்ளைகள் புணரியல் கற்றுச் சிறிது சலிப்புற்றிருத்தலைக் குறிப்பா லறிந்து, பத்துப்பாட்டில் நெடுநல்வாடையிலுள்ள சில இயற்கையழகு நவிற்சியை எடுத்துக் கூறியகாலை எளியே னுள்ளம் பள்ளத்து வழி வெள்ளம்போல் ஓடியதை ஒருபோதும் மறவேன். அந் நாட்குப்பின் பலவாண்டுகள் எனக்குத் தமிழ் பயில இடங் கிடைக்கவில்லை; ஆயினும், அன்று கேட்டவை உள்ளத்தை

விட்டகன்றதில்லை. எங்ஙனமாயினும் அப்பாடலைக் கற்க வேண்டுமென்றெழுந்த அவாவினால் ஏழாண்டுகட்குப்பின் அதைப் பிறருதவியின்றிப் பார்க்கலானேன். அதிற் கூறி யிருப்பவை முற்றும் எனக்குப் புலப்படவில்லையாயினும் குளிரின் கொடுமையும், ஊதையின் நடுக்கமும் உணர்ச்சிக் கேறின. பின் பன்முறை பயில்வதற்கு அஃதோர் தூண்டு கோலாய் நின்றது. சிறுவர்கள் உளம் புறப்பொருளிற் படியுமாறு அறநெறி புகலுஞ் செய்யுள்களிலும் எழுத்தியல் புணரியல்களிலும் உறையாது. 'மட்குடம்', 'கற்றீது' என்று புணரியலுக்கு எடுத்துக்காட்டாகக் கூறுஞ் சுவை யிலாச் சொற்கள் இளைஞர் நெஞ்சில் தங்கா; தங்கினுங் கொழுகொம்பில்லாக் கொடிபோல் இடர்ப்படும். ஆகை யால், சுவை நிறைந்த பாடல்களைத் தெரிந்தெடுத் தவற்றின் வழியாயச் சொற்கூற்றை விளக்கித் தமிழில் ஆவல் பெருகச் செய்யவேண்டும். தேனின் சுவை அறியாதவ னுக்கு அதை எடுக்கும் முறை கற்பித்தால் அவன் கூர்ந்து கேளான். தேனின் இனிமையை உண்டு கண்டவனே உடலை வருத்தி உயர்மர மேறி அதைக் கவரவும் பின் வாங்கான. முன்னோர் இயற்றிய நூல்களால் இஃது இனிது விளங்கும். வலியவற்றை எளிதாக்கிக் காட்டுவதை விட்டு, எளிதில் அறியக் கிடப்பனவற்றைக் கடுவகையிற் கையாடி, தமிழை நினைந்து இளைஞர் நெஞ்சொடுங்கச் செய்தல் யாது பயனைத் தரும்? இது நிற்க.

உள உணர்ச்சிக்கேற்ப இயற்கையை யமைத்துக் காட்டுதலால் அவ்வுணர்ச்சி மிகுதியும் வலியுறுமென்பதைப் பாலைத்திணையின்பாற் கண்டோம். குறிஞ்சியையும் அவ் வாறு நோக்குதல் நன்று. தட்ப மிகுந்த நாடுகளில் ஊதை வீசுங் கூதிர்நாள் நஞ்சுபோல் அஞ்சி வெறுக்கப்படும்

உறைபனி தெருக்களிலும் வீடுகள்மேலும் அமர்ந்து, விசும்பெங்கும் இருண்டு தோன்ற முகில் மூடி, இலையற்ற மரங்கள் வெறுங் கிளைகளுடன் பட்டனபோல் நிற்க, வெளியிற் புல்தானுந் தலைகாட்டா தொடுங்குங் குளிர் காலம் மேனாட்டாருக்குச் சாலவுங் கொடிய காலமாகும். நமக்கோ மழை, முகில், நீர், நிழல், பனி, ஓடை, பொய்கை, குளம், கடல், அலை, நுரை, ஆறு, ஊற்று, சுனை, வாய்க்கால், மதகு, ஈரம், தட்பம், பசுமை, புனலாடல், நனைதல், ஆறுதல், தணிதல், குளிர்தல் ஆகிய இவை பெரும்பாலும் இனிமையையே தரும். "அவன் கருங்குழற் கற்றை மருங்கு திருத்தி, அளகமும் நுதலும் தகைபெற நீவி, ஆகமுந் தோளும் அணிபெறத் தைவந்து, குளிர்ப்பக் கூறித் தளிர்ப்ப முயங்கிப், பிரிவலென்று வலிந்ததான்" (இறையனாரகப்பொருளுரை). இஃதனைய உரைகளால் அவ்வினிமை யுணரப்படும். ஆதலின மலைச்சாரலையுங் கூதிர்ப்பொழுதையும் நள்ளிரவையும் ஒன்றாக்கிப் புணர்தலோடு பொருத்தினார் முன்னோர். குறிஞ்சித்திணை களவுப் புணர்ச்சிக்குச் சிறந்ததாகலின் மக்கள் நடமாட்டமில்லாத மலைப்புறமும், ஒருவரும் வெளிவாரா கூதிர்ப்பொழுதும், கொடிய விலங்குகள் விழித்துத் திரியும் நள்ளிரவும் அதற்குத் துணையாயின.

திருந்திழாய் கேளாய்நம் மூரகெல்லாஞ் சாலும்
பெருநகை யல்க னிகழ்ந்த தொருநிலையே
மன்பதை யெல்லா மடிந்த விருங்கங்கு
லந்துகிற் போர்வை யணிபெறத் தைஇநம்
மின்சாயன் மார்பன் குறிநின்றேன் யானாகத்
தீரத் தறைந்த தலையுந்தன் கம்பலுங்
காரக் குறைந்து கறைப்பட்டு வந்துநஞ்
சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானைத்
தோழிநீ போற்றுதி யென்றி யவனாங்கே

பாராக் குறழாப் பணியாப் பொழுதன்றி
யாரிவ ணின்றீ ரெனக்கூறிப் பையென
வைகாண் முதுபகட்டிற் பக்கத்திற் போகாது
தையா றம்பலந் தின்றியோ வென்றுதன்
பைக்கழித்துக் கொண்டீ யெனத்தரலும் யாதொன்றும
வாய்வாளே னிற்பக் கடிதகன்று கைமாறிக்
கைப்படுக்கப் பட்டாய் சிறுமிநீ மற்றியா
னென்னைப் பிசாசரு ளென்னை நலிதரி
னிவ்வூர்ப் பலிநீ பெறாஅமற்கொள் வேனெனப்
பலவுந் தாங்காது வாய்பாடி நிற்ப
முதுபார்ப்பா னஞ்சின னாத லறிந்தியா
னெஞ்சா தொருகை மணற்கொண்டு மேற்றூவக்
கண்டே கடிதரற்றிப் பூசல் தொடங்கினனாங்கே
யொடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்க
ணிரும்புலி கொண்மா நிறுத்த வலையுளோ
ரேதில் குறுநரி பட்டற்றாற் காதலன்
காட்சி யழுங்க நம்மூர்க் கெலாஅ
மாகுலமாகி விளைந்ததை யென்றுதன்
வாழ்க்கை யதுவாகக் கொண்ட முதுபார்ப்பான்
வீழ்க்கைப் பெருங்கருங் கூத்து. (குறிஞ்சிக்கலி-65)

இதிற் குறிஞ்சிநில ஒழுக்கம் அதற்கேற்ற பொழுதுடன் கூறப்பட்டது. "மன்பதை யெல்லாம் மடிந்த இருங்கங்குல்" என்பதனால் நள்ளிரவும், "அந்துகிற் போர்வை யணி பெறத்தைஇ" என்பதனால் குளிர்காலமும் பெறப்பட்டன. "ஒடுங்கா வயத்திற் கொடுங்கேழ்க் கடுங்கண், இரும்புலி கொண்மார் நிறுத்த வலையுளோர், ஏதில் குறுநரி பட்டற்றால்" என்ற ஒப்புமையால் மலைப்புறத்தின் அணிமை பெறப்பட்டது. இப்பாடலில் காதலன் வரவை எதிர் நோக்கிக் காத்திருந்த தையல் ஒரு பார்ப்பான் கண்ணிற்பட்டு

அவனால் வருத்தம் எய்தியதைக் காட்டுகின்றது. இங்ஙனம், மக்களாலும், விலங்குகளாலும், இருளாலும், நிலவாலும், காவலராலும், உறவினராலும் வரக்கூடிய தடைகளை மேற்கொண்டு கூடுவது களவியலுக்கு மிகுதியும் பொருத்தமானது. 'நிழலருமை வெய்யிலிலே நின்றால் தெரியும்' என்பது பழமொழி யாதலின் காதலிருவர் தமது கருத்துக்கு முரண்பட்ட யாவற்றையும் விலக்கித் தம்மைப் பிரிக்க வெழுந்த இடையூறுகளை யொதுக்கி ஒருவரை யொருவர் பார்ப்பது அதிக இன்பத்தை அளிக்கு மென்பது எளிதில் அறியப்படும். மலை என்பது விலங்கு; விலங்கு குறுக்கே வளர்வது. காதலனும் காதலியும் சேர்வதற்குக் குறுக்காய் நிற்கும் பல செய்திகளை நோக்கி, மலை புணர்ச்சிக் கிடமாயிற்று. அன்றியும் குறுக்கிடுதல்=எதிர்ப்படுதல்; குறுகலர்=பகைவர், பொருந்தாதவர்; ஆகையினால், குறுகுதல்=அணுகுதல், பொருந்துதல், கூடுதல், புணர்தல்; அது நடக்குமிடம் குறிஞ்சி. குறிஞ்சி=குறுகிய ஊர், சிற்றூர், மலைப்புறத்துச் சிறியஊர். இவற்றால் நிலத்திற்கும் திணைக்குமுள்ள தொடர்பு ஒருவாறு புலப்படும். மேற்கூறியவாற்றால் நமது தமிழ் முன்னோர் இயற்கையை மக்களினின்றும் பிரித்துத் தனியாய்க் கூறினரல்லர் என்பது தெறறெனத் தெரியும். மக்களுக்கு வரும் நன்மை தீமைகளாற் பிறக்கும் மகிழ்தல், இரங்கல் முதலியவற்றோடு பொருந்த வைதது இயற்கையழகை உரைப்பதே தமிழ் மரபு. அஃதாவது இயற்கையை இருக்குமாறு உரையாது அஃது இருக்க வேண்டியவாறு உரைப்பது. (Describing Nature not as it is, but as is should be). இங்ஙனம், இயற்கையைத் திரித்தாள்வது தகுமோவென்று சிலர் ஐயுறலாம். வையகத்திற்கும் வானகத்திற்கும் உயிராய் நின்றிலங்கும் இறைவனது தன்மையைத் தம் அகததடக்கிய மக்களின் பெருமையைக்

கருதி இயற்கையை அவர்கள் உளப்பான்மையுடன் ஒன்று வைத்தல் தவருகாது.

இதுகாறும் கண்டவற்ருல், குளிர்காலத்தில் மலைச் சிறையிற் புணர்தலும், முதுவேனிலிற் பாலையில் பிரிதலும் ஏன் நிகழவேண்டுமென்பது காட்டப்பட்டது. இவை பிற விடத்திலும் பிறபொழுதிலும் நிகழாதோ எனின், இவை எவ்விடத்தும் எப்பொழுதும் நிகழும்; என்ருலும் அவற்றை நூலிற் கூறப்புகின் பெரியோர் வகுத்தவாறு கூறவேண்டு மென்பது. யாதுபற்றி அவ்வாறு கூறவேண்டுமென்று கடாவின்; நூலியற்றுதல் ஓவிய மெழுதலை யொத்த ஒருளத் தொழில். உளத்தின்கண் தோன்றிய காட்சிகளை ஓவிய வல்லான் நிறத்தில் எழுதி வெளிப்படுத்துகிருன் ; மொழி வல்லான் சொற்களில் வெளிப்படுத்துகிருன். இருவரும் அகத்தில் தோன்றியதையே புறப்படுத்துகின்றனர். ஒரு பட்டினத்தின் சிறப்பைக் காட்ட எழுதிய ஓவியத்தில் அழ கிய மாளிகைகளுங், கோவில்களும், கல்விமன்றங்களும், கண் ணுக் கினியவை விற்குங் கடைத் தெருக்களும், நன்மக்களுந் தோன்றுவா ; அதுகொண்டு அப்பட்டினத்தில் இடிந்த வீடுகளுங் கோழி ஆடு கொல்லப்படு மிடங்களுங், குருடர் முடவர் முதலியோரு மில்லையென எவருந் துணியார். ஓவி யப்புலவன் தன் கருத்திற் கேற்பப் பட்டினத்துள்ள சில வற்றை நீக்கிச் சிலவற்றைக் குறைத்து வேறு சிலவற்றைப் பெருக்கி எழுதுவான். இதனுல் அவன் உள்ளதை யுள்ள வாறு சொல்ல இல்லையெனக் கற்ருேர் குற்றங் கூருர்.

> "பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
> செய்யாமை செய்யாமை நன்று"

என வள்ளுவர் கூறி யிருப்பதைக் கருதி அவர் பிறவறஞ் செய்யாதிருத்தல் நன்றென விளம்பினரென்று பொருள்

கொளல் குறறறிவாகும். கொண்ட நோக்கத்திற்கேற்ப ஒன்றைக் குறைத்தும் வேறொன்றைக் கூட்டியுஞ் சொல்வ தியல்பு இதற்கிசையவே புணர்தல், பிரிதல் முதலியவை உலகில் எக்காலத்தும் எவ்விடத்தும் நிகழினும் கற்றுணர்ந் தோர் அவற்றை இடம், பொழுது, செய்தியுடன் சேர்த்துக் கூறி இனிமை யூட்டுவரென்க.

மருதத்திணையில் ஊடல் நிகழ்வதும் அகத்திற்கும் புறத் திற்குமுள்ள ஒற்றுமைபற்றியே. செந்நெல் விளையும் மருத நிலத்தில் உடையுணவு குறைவின்றி நண்பர் சுற்றத்தார் சூழ விருப்பத் தலைவனுந் தலைவியும் வாழ்வுழி அவர்க்குட் பிணக்க முண்டாவதியல்பே. குறிஞ்சியில் அவர்க்குண்டாகும் இடையூறு மிகுதி ; மருதத்தில் அவர்க்கிருக்கும் துணைகள் பல. ஆதலின், ஒன்றிற்கூடலும் மற்றொன்றில் ஊடலும் நேர்கின்றன. தாமரை மலரும் பொய்கைகளும், மனைகள் தோறும் கிணறுகளுள்ள பேரூரும், எருமையை யோட்டும் உழவரோதை முழங்கும் நெடுநல் வயல்களுமுடைய மருத நிலம் கற்புப் பகுதிக்கு மிகவும் ஏற்புடையதாதல் காண்க. முல்லை, மருதம், நெய்தல் மூன்றும் கற்புப் பகுதியைச் சார்ந்தவை. இந்நிலங்களுக்கும் இவற்றில் நிகழும் உரிப் பொருள்களுக்குமுள்ள பெயர்ப்பொருத்தம் தெளிவாய்த் தெரியவில்லை. ஆராய்ச்சியில உள்ளஞ் செலுத்துவோர் இதை முடித்துக்கொள்வாராக.

செம்மையான உடலமைப்பும் பார்ப்போருளத்தை மகிழ்விக்கும் அழகிய நகைமுகமு முடைய ஒரு மகனைக் கண்டபோது அவனைத் தீயவனென்று எவருந் துணியார் ; அவன் இனியனா யிருப்பானென்று நினைப்பதே மக்களுட் பெரும்பாலோர்க் கியல்பு. அவ்வழகிய மகனிடம் தவறாக

ளொன்றிரண்டு வெளிப்படுமேனும் அவற்றைப் பெரிதாக்கிப் பாராட்டாது மறைத்துங் குறைத்தும் புகல்வது நாடோறும் நாம் காண்பதொன்றாகும். இவ்வாறே அருவருக்கத்தக்க வெளித்தோற்றமுடைய ஒருவன் நன்மகனென்று பலர் கருதார். புறத்திற்கும் அகத்திற்கும் ஓர் இயைபு உண்டென்னும் நினைவு ஏறக்குறைய எல்லோரிடத்தும் உளது. நாமறியாமலே அத்தகைய எண்ணம் நம்மிற் குடிகொண்டிருக்கிற தென்பதை மறுக்கொணாது. எழில் வாய்ந்த மகன் தீச்செயல் புரிவானாயின் அதிலொரு முரண்பாடு தோன்றுகின்றமையின், "என்னே, இம்மகன் தொழில்! முகத்தைக் காணின் நன்மைக்கோர் உறைவிடமெனத் திகழ்கின்றான்; செய்கையோ அதைப் பொய்யாக்குகின்றது" என்று சொற் பிறப்பதை பன்முறை கேட்கிறோம். புறத்தெழிலும் அகத்தீமையும் ஒன்றியிருத்தல் இயற்கையாய் நாமெதிர்பார்க்கும் நிகழ்ச்சியாயின், அதைப்பற்றி நாம் இரங்குவதெற்றிற்கு? காட்சிக்கினியன் உளத்திலும் இனியனா யிருப்பதுகண்டு நாம் மகிழ்வதேன்? வெறுப்பைத் தரும் வெளி வடிவமுள்ளவன் நனியினியனா யிருத்தல் அறிந்து வியப்படைவதேன்? அகன்ற ஞாலத்தின் கண்பொருள்பறவை விலங்குகளிலும் மக்களிலும் பார்வைக்கும் தன்மைக்கும் அமைந்த ஒற்றுமையினும் வேற்றுமை பெரிதாயினும், உள்ளும் வெளியும ஒத்திருக்க வேண்டும் என்ற ஆவல் ஒருவரையும் விட்டதில்லை தொல்காப்பியா இவவடிவினர் என்று ஒருவருமறிந்து சொல்வதற்கில்லையாயினுந் தொல்காப்பியம் கற்பாருளத்திலெலாம் அவர் வடிவம் ஒருவாறு பதிக்கப்பட்டிருக்குமென்பது ஒருதலை. அவ்வடிவம் அவரது நூலில் வெளிப்பட்ட உளவியற்கையைக் கொண்டு அமைக்கப்பட்டதாகும். அவரவர் கல்வி கேள்வியுணர்ச்சிகட் கேற்ப இவ்வடிவம் வேறுபடுமாயி

னும் சிலவகையில் அஃது ஒத்திருக்கும். இங்ஙனம் உளத் தன்மை கொண்டு வெளித்தோற்றம் வகுக்கப்படுதல் இறும்பூதன்று. அகத்தின் பான்மை புறத்தில் விளங்க வேண்டுமென்று மக்கள் அனைவரும் நச்சுகின்றனர். இதை ஈராயிரமாண்டுகட்கு முன்னரே எளிதில் அறிந்த சான்றோ ராகிய தண்டமிழ்ப் புலவர் மக்களது இயற்கை நகை தணிப்பான், புணர்தல் பிரிதல் முதலிய உணர்ச்சிகளை அவற் றிற்குச் சார்பாயுள்ள இடம் பொழுதுடன் அமைத் தனரே யன்றி, அவ்வொழுக்கங்கள், குறித்த நிலத்திலும் நேரத்திலும் நிகழுமென்றன்று.

## நெய்தல்

### (கதப்பிள்ளையார் பாடியது)

தூங்க லோலை யோங்குமடற் பெண்ணை
மாவரை புதைதத மணன்மலி முன்றில்
வரையாத தாரம வருவிருந் தயருந
தண்குடி வாழ்ந ரஙகுடிச சீறூ
ரினிதுமன் றம்ம தானே பனிபடு
பல்சுர முழந்த நல்கூர் பரிய
முழங்குதிரைப் புதுமணை லழுந்தக கொட்கும்
வாலுளைப் பொலிந்த புரவித
தேரோர் நம்மொடு நகாஅ வூங்கே.

இப்பாட்டில் "தலைவர் நம்மொடு நகுவதன்முன் சீறூர் இனியதாயிருந்தது" எனக் கூறியிருக்கிறது. இச்சிற்றூர் முன்னிருந்த இனிய நிலையிலேயே இன்னுமுளதாயினும் தலைவர் அருகிலின்மையால் வருத்தமுடையதாய்த் தலை விக்குத் தோன்றுகின்றது. இதனால் நாம் மேற்கூறியவை நன்கு விளங்கும். குளிர்நாடுகளில் இளவேனிற்பொழுது

தொடங்கும்நாள் மிக ஆவலாய் எதிர்நோக்கப்படும் ; காதலர் கூடுவதற்கு அதுவே ஏற்றகாலமாகும். "என் காதலியே, கட்டழகியே, நீ எழுந்துவா. மாரிககாலஞ்சென்றது, மழை பெய்யும்நாள் அகன்றது ; செடிகளில் எங்கும் மலர்கள் விரிகின்றன. குருவிகள் வெளிவந்து ஒன்றையொன்று கூப்பிட்டுக் குலவுங்காலம் வந்தது ; காட்டுப்புறுக்கள் கூவுமோசை நாடெங்கும் கேட்கிறது. அத்திமரங் காய்காய்க்க, கொடி முந்திரி பூப்பூத்து நறுமணம் வீசுகின்றது காதலியே கட்டழகியே, நீ எழுந்து வா." இது மிகத் தொன்னளில் பாடப்பெற்ற பலஸ்தீன் (Palestine) நாட்டுப்பாடல்; பொருத்தமுண்மையால் இஃது இனிமையை ஊட்டுகின்றது. அறிஞர் இங்கொரு கடா வெழுப்பக்கூடும். அஃதென்னவெனின், முன்னோர் இயற்றிய நூல்களில் முதுவேனிற்பொழுது பிரிதற்கேற்ற காலமென்று நாட்டப்பட்டிருக்கத் தமிழ்நாட்டில் மணம் மிகுதியும் நிகழ்வது அக்காலத்திலேயே யன்றோ என்பதே. உண்மைதான் ; ஆனால் முதுவேனிலைப் பிரிதற்கும் கூதிரைக் கூடுதற்கும் பொருந்தி அமைத்தவெல்லாங் களவைக் கருத்திற்கொண்டே. அக்களவு இப்போது நிகழ்வதில்லையாதலின் இங்குப் பொருந்தாமை ஒன்றும் இன்மை காண்க. கற்பொழுக்கமே பெரிதும் நடைபெறத் தொடங்கியஞான்று முதுவேனிற் காலம் மணம்புரிவதற்கேற்ற பொழுதாக அமைக்கப் பெற்றிருக்க வேண்டும். இதிலும் மிகுந்த பொருத்தமுண்டு. அரசு செந்தளிர் விட்டு மிளிர்வதும், பனை ஈந்து பாளை விடுவதும், மல்லிகை முல்லை மலர்வதும், மா பலா பழுப்பதும், நெல்லறுத்துக் களஞ்சியஞ் சேர்ப்பதும் முதுவேனிலிலேயாம். மணத்திற்கு இன்றியமையாதனவாகிய உணவுப் பொருள்களும், மணப்பந்தலில் தொங்கவைக்கும் பனை, ஈந்து முதலியவற்றின் குலைகளும், யாவருஞ் சூடிக்களிப்படையும் நறுமலர்

களும் அரசாணிக் காலிற்கு வேண்டியனவும் எளிதிற் கிடைக்குங் காலத்தையே கற்புப் பகுதிக்கேற்ற கூட லுக்கு நாளாகக் கொண்டனர். தமிழாண்டு முதுவேனிலிற் பிறப்பது இதுபற்றியே போலும்

இனி, அகம் என்பது 'உள்' என்று பொருள் படுகின்ற மையாலும், 'உள்' என்பது 'உண்மை' என்பதன் முதனிலை யாதலாலும் உண்மை, வாய்மை, மெய்மை ஆகிய ஒரு பொருட்சொற்களைச் சிறிது ஆராயலாம். 'உள்' என்பது நெஞ்சைக் குறிக்கும்; அஃது 'அம்' ஈறுபெற்று, உளம், உள்ளம் என நிற்கும். உள்ளத்தில் நடப்பதன் கூறு உண்மை எனப்படும். உள்ளத்தில் நிகழ்வது உணர்வு, நினைவு, துணிவு (Feeling, Thinking, Willing) என முப்பாற் படும். உள்ளிருக்குங் கொட்டைக் கிசைய அதை மூடி யிருக்கும் பழம் அமைப்புப்பெறுமாறு அகத்திலெழும் உணர்வு நினைவுகளுக் கிசையச் சொல்லுஞ் செயலும் அமைதி பெறும். பழத்தை அறுத்துக் கொட்டையை வெளிப்படுத்துமாறு செய்கையைப் பகுத்துப் பார்த்து உண்மை யறியப்படும். ஒருவன் யாது நோக்கத்தைக் கொண்டு ஒன்றைச் செய்தானென்று புலப்படாவிடின், அவனது செயலின் தன்மை இன்னதெனத் துணியவிட மில்லை. ஆதலின், "அதன் உளவு யாது?" என்ற கேள்வி பிறக்கிறது. உளவு—உள்ளிருப்பது, உண்மை; உளவன் —உள்ளதையறிந்து சொல்வோன் ஒற்றன்.

உள்ளத்திற்றோன்றுவதே உண்மை அங்ஙனம் தோன் றியது வெளிப்பொருளுடன் ஒப்பிடப்படுகையிற் றவறாக வாவது திருத்தமாகவாவது இருக்கலாம். தவறாயிருப்பினும் அஃதுண்மையே, தாம்பைப் பாம்பென ஒருவன் பிறழக் கொண்டகாலையும், அவன் வரையில் அஃது உண்மையே.

இது திரிபுணர்ச்சி யெனக் கூறுவர். ஆனால் இது பிறர்க்குத் திரிபுணர்ச்சியாகத் தெரியுமே யன்றிப் பிறழ உணர்ந்த மகனுக்குத் திரிபுணர்ச்சி யாகாது. தாம்பைப் பாம்பெனக் கொண்டு அது தம்மேல் விழுந்ததன் பயனாகக் குலைகலங்கி நஞ்சேறியவரும் உளரெனக் கூறுவர். நஞ்சை உணவென உட்கொண்டு பிழைத்தாருமுளர். ஒன்றை மற்றொன்றாகக் கருதியவர் தாம் பிறழ உணர்ந்ததை அறியுங்காறும் அவர்கள் அகத்தினெழுந்தது எதுவோ அதுவே உண்மை. ஆயின், உண்மை என்பது புறப்பொருள்களுடன் எவ்வகைத் தொடர்புமில்லா ஒன்றேயெனின், எமைப்போல் சிற்றுணர்வுங் குற்றறிவு முடையோர்க்கு, உளத்திற் றோன்றுவதற்கும் வெளியிலிருப்பவற்றிற்கும் மிகுந்த வேற்றுமை காணுமெனினும், தூய உணர்ச்சியும் நல்லறிவுமுடைய மேன்மக்கள் அகத்தைப் புறமாகவும், புறத்தை அகமாகவுங் காண வல்லார் என்றே கொளல்வேண்டும். பல்வேறு நூலறிவைப் படைத்தவா இதற்கு ஏற்ற விடையளித்தல் கூடும். ஆயினும் நமது தமிழ் முன்னோர்கள் நெஞ்சை முதலாக வைத்து உண்மையை அதன்பாற் சேர்த்தன ரென்பதில் ஐயமில்லை.

இனி, 'உளது' எனுஞ் சொல் 'இருக்கிறது' எனப் பொருள்படுவதால் இவ்விரண்டிற்குமுள்ள பொருத்தத்தை அறிவது நன்று. உளது என்பது உண்டு எனவும் வரும். அதிலும் உள் என்பதே முதனிலையாகும். ஒன்று இருப்பதும் இல்லாததும் மக்கள் நெஞ்சில் அது தோன்றுவதும் தோனாமையுமே. ஆகலின், இருத்தலும் உளதாதலும் ஒன்றேயாகும் உணர்ச்சிக்கு எட்டாத பொருளைப்பற்றி அறிவுமில்லை பேச்சுமில்லை புலன்களின் வழியாய் அல்லது காட்சியின் வழியாய் ஒன்று கருத்தில் வடிவங்கொண்ட

3

பின்னரே, அஃது இருக்கிறது அல்லது இல்லை என்று பேசுவதற் கிடமுண்டு. "இருப்பது பொய், போவது மெய்" என்றதில் இருத்தல் எனுங் கிளவி உயிர்வாழ்தலைக் குறித்தது. இதனால், உயிர்வாழ்தல் என்பதும் அகத்தின் நிகழ்ச்சியே என்பதும் பெறப்படுகின்றன வாழ்க்கை எனப் படுவது நெஞ்சிற்றோன்றும் நினைவு உணர்வு துணிவுகளின் தொகுதியே யாகும். ஆனால், சொல் செய்கை முதலியவை வாழ்க்கையின் கூறுகளாகாவோ வெனின், இவை நினைவு உணர்வுகளின் வெளியீடேயாகுமாதலால் அது கடாவன்று. வடமொழியில் உண்மை என்பது (सत्यं) சததியம் என்ற மொழியால் உணர்த்தப்படும். இதன் முதனிலையாகிய (सत्) சத் என்பதன் பொருள் 'இரு' என்ற தமிழ்ச்சொல்லாற் குறிக்கப்படுவது, (तत् सत्) தத், சத்,—அது, இருக்கிறது. இந்த சத் (सत्) என்ற முன்னிலையே ஆங்கிலததில் Sooth என்று வருவதாக மொழிநூற்காரர் விளம்புகின்றனர். இவ் ஆங்கிலச் சொல்லும் 'உண்மை' என்றே பொருள்படும்; For-sooth என்ற மொழியுடன் ஒப்பிடுக. இஃதன்றி 'இருத்தல்' என்பது அமர்தலையுங் குறிக்கும். அமர்தல் = உட்கார்தல். உட்கார்தல் என்ற சொல் உள் என்ற அடியைக்கொண்டு பிறப்பதென்று தெரிகிறது. ஆயினும், அமர்தலுக்கும் உள் நிகழ்வதறகும் யாது தொடர்பு உள தென்று விளங்கவில்லை. பண்டைத் தமிழர் அகத்திற்கும் புறததிறகுமுள்ள ஒற்றுமை வேறறுமைகளை எவ்வளவு ஆழ்ந்து கருதித தாம் அறிந்தவற்றைத தககச சொற்களில் அமைத்துப் போயினர் என்பது இறையனு ரகபபொருளா லும் தொல்காப்பியப் பொருட்பகுதியாலும் தெள்ளிதில் அறி யப்படும். மேல்நாட்டு உண்மை ஆராய்ச்சியாளரிற் சிலர், மக்களுளத்தில் நிகழ்வதேயன்றி வேறு பொருள் உலகத்தில் உண்டோவென்று ஐயுற்று நெஞ்சிற் றோன்றுவது தவிரப்

பிறிதொன்றுங் கிடையவே கிடையாது என்றுங் கூறிப் போந்தனர். இதற்கெதிராக மற்றுஞ் சிலர் வையத்தில் இல்லாதது கருத்திலும் இல்லை என்று அறைந்தனர். இவற்றுடன் தமிழா கருத்தை ஒப்பிடுக. உண்மை ஆராய்ச்சியில் எனது தேர்ச்சி மிகச் சுருக்க மாகையால் இதைத் தொடர்ந்துபோக நாணுகின்றேன். அவ்வாராய்ச் சியில் வல்லவர் இதைத் தொடர்ந்து சென்று முடிவு காண்பாராக.

இனி வாய்மை என்பது உண்மைக்கு மறுபெயராய் வழங்குதலின் அதையு மாராய்தல் நன்று. வாய்மை என்பது சொல்லின்படி வாயின்தன்மை என்று பொருள்படும். ஆகையால் அஃது உளத்தின் குறிப்பைக் காட்டும் உண்மை என்பதுடன் தொடர்புடையதே யன்றி அதனுடன் ஒன் ருகாது. இயற்கையாய் வாய் பேசுவது உலகத்தில் நேராகத் தோன்றியதையே. ஒரு பொருளுக்கும் அதன் பெயருக்கும் உள்ள கேண்மை உளத்திற்கும் வாய்க்கும் உண்டு. எங்ஙனம் ஒரு பொருளினின்றும் பெயரைப் பிரித்த லரிதோ, அங்ஙனமே, உண்மையினின்றும் வாய்மை யைப் பிரித்தலும் அரிதாகும். ஆதலின், வாய்மை என்பது செவிக்குப் புலனுகும் உண்மையின் ஒரு வடிவமாம். வாய்மை என்பதற்குப் பொருள் இஃது என்பது மெய்ம்மை என்ற சொல்லை உற்றுநோக்குவதாலும் வெளிப்படும். மெய் மை—மெய்யின் தன்மை; அஃதாவது " உடலின் பான்மை உளத்திலெழுந்து வாயாலன்றிப் பிறபொறிகளின் வழி யாய்ப் புலப்படுவது மெய்ம்மை ஆகும். மெய்ப்பாடு என் பது மக்கள் உள்ளநிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே புறத் தார்க்கும் புலப்படுவதோர் ஆற்ருன் வெளிப்படுதல்" என்று உரையாசிரியர் மெய்ப்பாட்டை வரையறுத்தலால் யாம் கூறுவது வலியுறுகின்றது. உண்மை, வாய்மை,

மெய்ம்மை ஆகிய மூன்றிற்கு முள்ள தொடர்பை மூதறிஞ ராகிய தமிழர் எவ்வாறு கருதினுர்கள் என்பதைச் சொற் களின் உதவியால் விளக்க முயன்றேன். அகம், புறம் என்று எடுத்துக்கொண்ட பொருளில் இஃது இடையே தோன்றியதாதலால் இனி இதை நிறுத்தி முதற் பொருளுக் குச் செல்வேன்.

'அகப்பட்டது' என்று சொல்லுங்கால், ஒரு பொருள் பொறிகளின் வழியாய அகத்திற்கு எட்டிற்று என்பது கருத்து முன் கண்டவாறு ஒரு பொருள் அகத்திற்கு எட்டாவிடின் அஃது இருந்தும் இல்லாததேயாகும். அகம் என்பது யாது? அது பொறி புலன்களைத் தன்னிலடக்கி யவற்றினின்றுந் தனித்தியங்கு மொன்று. ஏனெனின், அகம் பாராவழி, கண்கள் பாரா; காதுகள் கேளா. செவி யிற் பட்டதும் கண்ணிற பட்டதும் அகத்திற படா தொழி தலுமுண்டு. யாதாயினு மொன்று காலிற்பட்டது அல்லது கையிற்பட்டது என்று சொல்வதோ டொக்க உளத்திற பதிந்ததை அகப்பட்டது என்று சொல்லுகிறோம். மேற் கூறியவற்றால் 'அகம்' என்பதும், 'நான்' என்பதும் ஒரு பொருட் கிளவிகள் என்பது தெரிகிறது. வடமொழியில் 'அகம்' என்ற சொல் (Latin Ego) நான் என்று பொருள் தருவதைத் தமிழர் ஆராய்வாராக.

'அகப்பட்டது' என்பதன் பொருளுக கிசையவே, 'புறப்பட்டது' என்பது 'வெளிவந்தது' என்று பொருள் தரும் "கப்பல் புறப்பட்டது" எனின், அது துறையை விட்டு வெளியே சென்றது என்பதுவே முதற்பொருள். இப்போது 'புறப்பட்டது' என்றால் அசைந்தது, ஊர்ந்தது, நகர்ந்தது, தோன்றியது என்று பொருள் செய்கிறோம். இதில் தவறொன்றுமில்லை யாயினும் முதற்பொருள் இன்ன

தென்பதை நாம் மறக்கலாகாது புறப்பாடு என்ற சொல் புறப்படுகையை யுணர்த்துவதுடன் உடம்பிலெழும் பரு, கட்டி (Boil) இவற்றையுங் குறிக்கும். இப்பொருளில் அச்சொல்லின் நேரான கருதது அமைந்திருத்தல் காண்க. நம்மைச் சேராதவரைப் 'புறத்தியார்' என்று சொல்வது வழக்கு. அகத்தோடு பொருந்தாதவரை அங்ஙனம் கூறுவது ஒக்கும். 'புறத்தியார்' என்பது 'பிறத்தியார்' எனவும் வரும். இரண்டாவது மொழி 'பிறர்' என்பதுடன் தொடர்புடையது. 'புறத்தியார' 'பிறர்' என்பவற்றிற் குள்ள கேண்மை தெளிவாய்த் தெரியவில்லை.

இனி, அகம் என்பது வீட்டையும், புற மென்பது வெளியையு முணர்த்தி ஒன்றிற்கொன்று எதிர்மறையாய் நிற்பதைச் சற்று ஆழ்ந்து நோக்குவாம். வீடும் வெளியும் பார்வைக்கு எதிர்மறையாய்த் தோறறினும் உண்மையில் அவை முரண்படுவன வல்ல. வீடென்பது வெளியிற்றே ன்று மொன்றே யன்றி யதனினின்றும் வேறுபட்டதன்று. வெளியிலொரு பகுதியில் சுவரெழுப்பித் தடுப்புச் செய்து ஆக்கப்படு மொன்றே வீடென வழங்குவது. உண்மை இங்ஙனமிருப்ப, எவ்வாறு அது வெளியுடன் முரண்படும்? வெளியைத தடுப்பதனாலன்றே மலைக்கு விலங்கென்று பெயர் எழுந்தது விலங்கென்பது தளை; தளை என்பது கட்டு; கட்டப்பட்டது வீடு. வெளியைக் கட்டி வளைத்து வீடெழுப்புவர், கட்டுதல் = அடைத்தல்; 'நீர் கட்டுதல்' என்பதனை யுணர்க ஆதலின், வெளியின் ஒரு வேற்று மையே வீடாவதன்றி வேறு தனிப்பொருளன்று. இரண்டும் நிலம், புனல், எரி, வளி, விண் என்பவற்றின் கூட்டமேயாகும். ஆயினும், வெளியிற் கிடையாத ஒருவகை அமைதியும் இன்பமும் வீட்டிலுண்டு. இஃது உடலின்கண் அமைந்த அகத்திற்கும் பொருந்தும்.

வாயில், நடை, முற்றம், பள்ளியறை, கூடம், அடுப்பங்கரை, தோட்டம் ஆகிய இவற்றின் சேர்க்கையால் மாத்திரம் ஓரிடம் வீடாகி விடாது. கை, கால், தலை முதலியவை அகமாகா. காதல ரிருவரின்றி வீடமையாது. இவர்களுள் காதலியே பெரும்பாலும் வீட்டில் திகழ்பவள். காதலியை மனைவி என்றும் இல்லாள் என்றும் தமிழர் கூறுவர்; கணவனை யவ்வாறு கூறார். தன்னினும் ஒருவாறு வேறுபட்டு, அன்பினால் தன்னுடன் ஒன்றாய இணைக்கப் பட்ட ஓருயிர்த்துணை யில்லாவிடின் அறமேது, வீடேது? வெளியிற் றிரிந்து தொழிலியற்றுங் கணவனும் வீட்டி லிருந்து இனிமை செய்யுங் காதலியும் நுகருமின்பங்க ளில்லா வீடு வீடாகுமோ? வையக வாழ்விற்கென்று பலவகைத் தொல்லைக்குட்பட் டுழலும மகன், அன்புடைய மனைவி யுறையுமிடஞ் சேர்ந்ததும் கவலை நீங்கி யமைதி பெறுதல் இயல்பு. பொருள்தேடுதலிலும், தன் நோக் கத்திற்கு எதிராய் நிற்பவரை மேற்கொள்ளுதலிலும் ஒருவன் படும் வருத்தங்களும் துன்பங்களும் மனையிலும் அவனைப் பின்தொடருமேல் அவ்வுறைவிடம் யாது பயனைத் தரும்! இங்ஙனம் ஒரு மகனுக்கு அமைதி தரும் வீட்டைப் போல் மறுமையில் உயிருக்கு அமைதி தருமொன்றைத் தமிழர் வீடென்றே சொல்வர்.

பொருள்வயிற் பிரிந்த காதலன் வரவை எதிர்நோக்கி யுருகி மெலிந்து நெஞ்சு புண்ணாகுந் தலைவியின் தன்மையை கூறும் அகப்பாடல்களின் சுவை நனி இனிது. இவ்வகைப் பாடல்களில் கருதத்தக்க தொன்றுண்டு காதலர்களைப் பற்றிப்பிறமொழி மக்கள் எழுதிய நூல்களில் காதலர்களின் தோற்றம் நுண்மையாய் விரித்துரைக்கப்படும். அவர்களது உடையின் சிறப்பு, அணிவகை, உறுப்பமைப்பு முதலியவை

ஒவ்வொன்றாய் நவிற்சி பெறும். கற்பவர் உளத்தில் அக்காதலரின் வடிவம் பதியுமாறு அடிமுதல் முடிவரை அவரைச் சொற்களால் எழுதிக் காட்டுவர். பண்டைத் தமிழ் நூல்வல்லோர் அங்ஙனஞ் செய்யவில்லை. காதலரின் அழகைப் படிப்பவர் வியந்து நோக்கவேண்டுமென்று அவர் விரும்பினரில்லை. அவர் கொண்ட கருத்திற்கு அது பொருந்தாது புணர்தல், ஊடல், இரங்கல் முதலிய உணர்ச்சிகளையே அவர் கற்பவர் உளத்திற் பெருக்க முயன்றிருக்கின்றனர். ஆதலின் பண்டைத் தமிழ்ப் புலவர் அகப்பாடல்களில் உயிரின் வெவ்வேறு நிலைகளாகிய புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல், பிரிதல் என்பவற்றையே பெரிதுங் கருதிப் பாடல்கள் அமைத்தனர் என்பது விளங்கும். அறம், பொருள், இன்பம், வீடு என்பன ஒருவகையில் இம்மையையும் பிறிதொரு வகையில் மறுமையையுஞ் சுட்டுகின்றன. தமிழான்றோர் எப்போதும் இரண்டையுங் கூட்டியே நூல் செய்தார். நாம் ஆராயப் புகுந்த வீடு என்ற சொல் இருமைக்கும் பொதுவாதல் நோக்கி இவ்வளவு கூற நேர்ந்தது.

தடுப்புச் சுவரிடிந்தால் வீடு வெளியாகும், கட்டு நீங்கினால் அகம் புறமாகும். அகமாகிய 'நான்' புறமாகிய வெளியிற் கலத்தலைத் தமிழர் வீடு என்பர். வீடு = விடுதலை; விடுதி என்ற மொழியையு மாராய்க. வெளி என்பது பெருவெளி, வெட்டவெளி; வெட்டவெளி = இறைவன். வீடு கட்டப்படுமாறே, யாக்கையுங் கட்டப்பட்டதாகும். யாத்தல் = கட்டுதல். அகம் புறமென் றெடுத்துக்கொண்ட இவ்வாராய்ச்சி உயிரையும் இறைவனையுஞ் சுட்டி இரண்டு மொன்றுமாறு காட்டிற்று.

---

# 3. கடலும் கடலையும்

ஆண்டிகளிற் பஞ்சத்து ஆண்டியுமுண்டு, பரம்பரை ஆண்டியு முண்டு; பொய்யாண்டியு முண்டு, மெய்யாண் டியுமுண்டு, ஆனால் நானோ நையாண்டி வயிற்றுப் பிழைப்புக்காக வேஷம் போட்டுக் கையேந்திப் பல்லைக் காட்டுவது என்னுடைய வழக்கமன்று கைப்பொரு ளில்லாததினால் இரந்துண்டு பிழைக்கிறவர்களை ஆண்டிக ளென்று அழைக்கிறார்கள். மெய்ப்பொருளைத் தேடி அங்கு மிங்கும் அலைகின்றவனாகிய யானும் ஓர் ஆண்டிதான். இதன்பொருட்டு நானும் ஓர் ஆண்டியாகத் திரிந்து வருகிறேன். இந்த உண்மையை அறியாத பலர் என்னை ஒரு பிச்சைக்காரனாகவே நினைத்துக் கொள்கிறார்கள். அதனால் எனக்கு ஒரு நஷ்டமுமில்லை.

ஒருநாள் சென்னைக் கடற்கரையில், நாலைந்துபேர் ஒன் றாக உட்கார்ந்து உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்தனர். அவர்களுள் ஒருவர், "நாளைக்குப் பூனாவிற்குப் போகி றேன்" என்றார். உடனே மற்றொருவர், "பூனாவைப் பற்றிப் பல தடவைகளில் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் அஃது எங்கிருக்கிறதென்று எனக்குத் தெரியாது" என்று சொன்னார். இந்தச் சந்தர்ப்பத்தில் நான் அவர்களை அணுகி, "பூனா எங்கே இருக்கிறதென்பதை முதல் வகுப் பில் படிக்கிற சிறு பிள்ளைகளும் அறிவார்கள்; உமக்கு இது தெரியாமல் போனதென்ன?" என்றேன். அவர்களெல் லோரும் சிறிது கோபத்துடன் என்னை உற்று நோக்கினார் கள். சிறிது நேரம் கழித்து அவர்களிலொருவன், "இவர் ரொம்ப படிச்சவர்போலிருக்கிறது" என்று இகழ்ச்சியுடன் சொன்னான். அப்போது நான், "நான் படிச்சவர் என்பதும்,

நீங்கள் குட்டிச்சுவர் என்பதும் இப்போது வெளியாகப் போகின்றன" என்றேன். அவர்கள் மிகவும் சின மடைந்து, "இவன் கர்வத்தை என்னவென்று சொல்வது?" என்று ஒருவரோடொருவர் பேசிக்கொண்டனர். அவர்களுடைய பேச்சை நான் கொஞ்சமும் கவனியாமல், "இந்துஸ்தானியில் சுவர் என்றால் பன்றி என்று அர்த்தம். குட்டிச்சுவர் என்றால் பன்றிக்குட்டி என்று பொருள்" என்று கூறினேன். அவர்கள் என்னைப்பார்த்து, "கஷ்டப்பட்டுச் சம்பாரிச்சித் தின்னுகிறவனானால் அவனோடு பேசலாம். சம்பாரிச்சித் தின்ன சாமர்த்தியம் இல்லாதவனோடு என்னதகைச் சொல்லுவது?" என்று தங்களைத் தாங்களே சமாதானப்படுத்திக் கொண்டார்கள். உடனே நான், "நான் சம்பா அரிசிதான் சாப்பிடுகின்றேன். நீங்கள் என்ன அரிசி சாப்பிடுகிறீர்கள்?" என்று கேட்டேன். "இது என்னடா தொல்லையாய்ப் போச்சுது! அப்பா நீ ஒழிஞ்சி போ, உனக்கு ஒரு சலாம்" என்று அவர்களிலொருவன் என்னை வேண்டிக்கொண்டான் இந்தவேளையில் நான் சிறிது உள்ளே நகைத்துக்கொண்டு "அப்பா, சலாம்; இன்னும் கொஞ்சம் பேசலாம்" என்று சிரித்தேன். அவர்களும் என்னோடு சேர்ந்து சிரித்து விட்டார்கள். இதற்கு மேல் நான் அவர்களைப் பார்த்து, "நண்பர்களே உங்களில் ஒருவருக்கும் பூனா எங்கிருக்கிறதென்று தெரியவில்லை. அதைச் 'சொல்லிவிட்டுப் போகிறேன். உங்களில் யாருக்காவது பானா, பாவன்னா, பீனா, சொல்லத் தெரியுமா?" என்று வினவினேன். அப்போது ஒருவர், "அது கூடவா தெரியாது, பானா, பாவன்னா, பீனா, பீயன்னா, பூனா, பூவன்னா" என்று மேலே சொல்லப் போகும்போது, "போதும் போதும் நிறுத்தும்" என்று தடுத்தேன். அவர் அப்படியே நிறுத்திவிட்டார்.

"பீயன்னாவுக்குப் பக்கததில் பூனா இருக்கிறது உங்களுக்குத் தெரியாமல் போனதென்ன!" என்று நான் கேட்டபோது, அவர்களெல்லாம் விழுந்து விழுந்து சிரித்து என்னைத் தங்களருகில் உட்கார்ந்து பேசும்படி கேட்டுக் கொண்டார்கள். இதற்கிடையே ஒருவன், "சுடச் சுடக் காராமணி, ஐயையோ சுடுதே, அப்பப்பா சுடுதே, காராமணி, கடலை பட்டாணி" என்று கூவிக்கொண்டு வந்தான். நான் என்முன் இருந்தவர்களைப் பார்த்து, "எனக்குக் கொஞ்சம் கடலை வாங்கிக் கொடுப்பீர்களானால், சிறிது நேரம் உங்களோடே பேசுவேன்" என்றேன். "போயும் போயும் கடலைதானா உமக்கு வேண்டும்!" என்றார்கள்.

"கடலை என்ன அற்பமானதா? அகஸ்திய ரிஷி முதலியவர்களெல்லாம் கடலை சாப்பிட்டிருக்கிறார்கள். அஃது உங்களுக்குத் தெரியுமா?" என்று பதில் கேள்வி கேட்டேன்.

"அகஸ்தியர் கடலை சாப்பிட்டதாக நாங்கள் கேட்டது மில்லை, படித்தது மில்லை?" என்று அவர்கள் விளம்பினார்கள்.

"அப்படியானால் நான் சொல்லுகிறேன் கேளுங்கள்" என்று நான் பேசத் தொடங்கினேன். "எலிமீது ஏறிய யானைக்கும், மயில்மேல் குந்திய காளைக்கும் தந்தையாகி" என்று நான் சொல்லிக்கொண்டு போகையில், "எலியின் மேல் யானை எப்படி ஏறும்?" என்று ஒருவர் கேட்டார்.

"எலியில் பெருஞ்சாதி பெருச்சாளி; அந்தப் பெருச்சாளி மீது ஏறிய யானை, விநாயகர்; மயிலின்மேல் குந்திய காளை, முருகன்" என்று விடையளித்தேன்.

"ஓஹோ! அப்படியா! சரிதான், அப்புறம் சொல்லுங்கள்" என்று அவர்கள் வேண்டிக்கொண்டார்கள்.

நான் மறுபடியுந் தொடங்கினேன் :—

"எலிமீது ஏறிய யானைக்கும், மயில்மேல் அமர்ந்த காளைக்குந் தந்தையாகி, எருமைக் கடாவின்மேல் ஏறி மார்க்கண்டன் உயிரைக் கவர்ந்த யமனை, எருதின்மேல் சவாரி செய்துபோய்த் தாக்கிய பரமசிவன், பருவதராஜன் பெற்றெடுத்த புத்திரியாகிய பார்வதியைக் கலியாணம் செய்துகொண்ட காலத்திலே தேவரும் மற்றை யாவரும், கைலயங்கிரியிலே அவருடைய மணக்கோலத்தைக் காண வந்ததனால், பாரந் தாங்கமாட்டாமல், வடதிசை தாழ்ந்து தென்திசை உயர்ந்துபோக, எல்லோரும் அதைக் கண்டு திடுக்கிட்டுப் போனார்கள்" என்று ஆனந்தபைரவி இராகத்திலே சொல்லிக்கொண்டு வந்தபொழுது, காராமணி கடலை பட்டாணி விற்றவன தன் தலையிலிருந்த கூடையை இறக்கிக் கீழே வைத்து அதிக ஆவலுடன் நான் கூறியதைக் கேட்டுககொண்டு நின்றான்,

அவனை நான் பார்த்து, "அப்பா, கடலை விற்கும் கடலையாண்டி, அகஸ்தியர் கடலை சாப்பிட்ட கதையைச் சொல்லப்போகிறேன். நீயும் உட்கார்ந்து கேள்" என்று சொல்லி மறுபடியும் ஆரம்பித்தேன். "வண்டி குடை கவிழ்ந்ததுபோல் உலகம் ஒருபுறம் சாய்ந்து கிடந்ததைக் கண்டு எல்லோரும் நடுங்கி நிற்கும்போது, நெற்றியிலுள்ள நெருப்புக்கண்ணின் உஷ்ணம் அதிகரிக்காதபடி தலையிலுள்ள சடையிலே கங்கை நீரைக் கட்டிவைத்திருக்கும் சாம்பசிவன் அருகிலுள்ள குள்ளமுனியாகிய அகஸ்தியரைப் பார்த்து, 'நீ போய் உலகத்தை முன்போலச் சமநிலைப் படுத்து என்று ஆக்ஞாபித்தார். அவ்வாறே இந்த அகஸ்தியமுனி தென்றிசைக்குச் சென்று உலகத்தைச் செப்பனிட்டார். இவ்வாறு மகத்துவம் மிகுந்த அகஸ்தியரிடத்தில்

ஒருநாள் ஆயிரங்கண்ணனாகிய தேவேந்திரன் வந்து தேவர்க ளெல்லாரையும் விருத்திராசுரன் என்ற ஓர் அரக்கன் வருத் துவதாயும், அவ்வரக்கன் சமுத்திரத்தில் ஒளித்துக்கொண் டிருப்பதாயும் முறையிட்டான். உடனே குறுமுனியாகிய அகஸ்தியர் சமுத்திரதனதைச் சாப்பிட்டு அந்த அசுரனை வெளிப்படுத்தினார். கேட்டீர்களா, ஓ ஜனங்களே!" என்று நான் பேசி முடிதநேன்.

இதைக் கேட்டவர்கள் சிறிது நேரம் யோசனைசெய்து, "அகஸ்தியா கடலை சாப்பிட்டதாகச் சொன்னீர்களே, அதைப்பற்றி ஒன்றும் சொல்லாமல் வேறு என்னமோ பேசிவிட்டீர்களே!" என்றார்கள்.

"அதைப்பறறித்தான் இப்போது நான் பேசி முடித் தேன்" என்று சொன்னேன்.

"இல்லையே" என்றார்கள்.

"ஆம்" என்றேன்.

"இல்லவே இல்லை" என்றனா.

"சமுத்திரம் என்றால் என்ன?" என்று கேட்டேன்.

"சமுத்திரம் என்றால் கடல்" என்றார்கள்.

"கடலை அகஸ்தியர் சாப்பிட்டார் என்று நான் சொன்னேன். அவர் கடலை யுண்டதை நான் சொல்ல வில்லையென்று எப்படி நீங்கள் சொல்லலாம்?" என்று நான் கேட்டபோது அவர்கள் வாயைத் திறந்து மூக்கில் விரலை வைத்துக் கொண்டனர்.

இதற்குப்பின் நாங்கள் இரண்டணாவிற்குக் கடலை வாங்கி உண்டோம். என்முன் இருந்தவர்கள் கையில் கட லையை வாங்கி உண்ணும்போது அஜாக்கிரதையாகப்பல கட

லைகளைக் கீழே சிந்தினார்கள். நான் அதிகக் கவனத்துடன், ஒன்றுவிடாமல் பொறுக்கலானேன். உடனே அவர்கள் என்னைப் பார்த்து, "வேண்டுமானால் இன்னும் கொஞ்சம் கடலை வாங்கிக் கொள்ளலாம்; மணலில் விழுந்ததை ஏன் பொறுக்குகிறீர்கள்?" என்றார்கள்.

"சிறியோர் சிந்திய சிறுகடலை யெல்லாம
பெரியோ ராயிற பொறுக்குவது கடனே."

---

# 4. முற்காலமுந் தற்காலமும்

முற்காலமே தற்காலம்; இறந்ததே சிறந்தது; சென்றனவே நல்லன என்று நினைப்போர் நம் நாட்டிற் பெரும்பான்மையராகலின், அவர் கருத்தைப் பகுத்துநோக்கி உண்மைகாண்டல் பலர்க்கும் பயன்தரும் என்ற நோக்கம் பற்றி இவ்வாராய்ச்சி எழுந்தது. இதில் அனைவரும் ஒப்பத் தகுந்த ஒரு முடிபிற்கு வருவது இயலாததே. எடுத்துக் கொண்ட ஆராய்ச்சியின் நோக்கத்திற்கும், எழுதப்புகுவோரின் அறிவு அனுபவங்கட்கும் ஏற்ப நியாயங்களையும் உதாரணங்களையும் எடுத்தாள முடியுமேயன்றிப், பலவாறாகத் தோன்றும் ஐயத்திற் கெல்லாம் விடைகூறிச் செல்லுமாறில்லை. இதனைக் கண்ணுறும் நண்பரிற் பலரோ அன்றிச் சிலரோ எமது முடிவுக்கு முரண்படலாம் அதுவே இவ்வாராய்ச்சியைக் குற்றமுடைய தாக்காது. கருத்து வேறுபாடின்றேற் கட்சிபேதமில்லை; அஃதின்றேல் ஆராய்ச்சியுமில்லை, வாதுமில்லை; அவையின்றேல் உண்மை வெளிப்படுதலுமில்லை. இதுகொண்டே அரசியல் முறையிலும் உலகியல் முறையிலும் எஞ்ஞான்றும் பிரிவு காணப்படுகின்றது.

ஒரு பிரிவினர், முன்னோக்கம் முன்னேற்றமாகிய இவற்றையே எண்ணி, சீர்திருத்தம் பழையன கழிதல் எனும் இவற்றிற் கருத்தை நாட்டுகின்றார்கள். வேறொரு பிரிவினர் திருத்தங்களாலும் மாறுதல்களாலும் பிறக்குங் கஷ்டங்களையும் கவலைகளையுங் கவனித்துத் தொன்றுதொட்டு வருவனவற்றையே நிலைநாட்ட முயல்கின்றனர். ஒருவன் எத்துணை வல்லவனாயினும் அவன் முன்னோருடைய கல்வி அனுபவமாகியவற்றை விலக்கித் தானே ஒன்றை நூதனமாகப் படைத்துக்கொள்ளுதல் கூடாத காரியம். பழையவற்றின்

உதவியைக்கொண்டே புதியவை இயற்றப்படல் வேண்டும் இஃதிவ்வாருக, முன்ஞோ தேடிவைத்த அரும்பொருட் பெருங்குவையை ஒரு மகன் வருந்தி யுழைத்து வளர்க்காது வாளாவிருந்து உண்பஞயின், அப்பொருள் குன்றூயை தாயினுங் குன்றிவிடும். இது செல்வத்திற்கே யன்றிக் கல்விக்கும் பொருந்துமாகையால், முற்காலத்துப்பெரியோர் நின்ற நிலையில் நாமும் நிற்போமெனத துணிதல் பயன் தராது. இதனல், சீர்திருத்தத்தை நாடுவோர் பழையவற்றை அறவே யொழிததலும், பண்டையவற்றையே போற்று வார் புதியவற்றை முற்றும் கழித்தலும் முடியாவென்பது பெறப்பட்டது சில நூற்ருண்டுகட்குமுன் நாகரிகமடைந்த தேசத்தோர், தங்கள் எண்ணங்களையும் துரைதனை முறைகளையும் நடையுடைகளையும் எளிதில் திருததி யமைத்துக் கொள்ள வல்லவராயிருக்கின்றனர். அதனல் அவர்களடையும் நன்மை பலவாயினும, அதிற் குறைவொன்றும் இல்லையென்று சொல்ல வியலாது. திருததங்களுக்கும் ஒரு வரம் புண்டென்பதை மறத்தல் பெரும் பிழையாகும் ஆனல் அவ்வரம்புங் காலததிற் கேற்றபடி திருத்தப்படல் வேண்டும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாகச் சிறப்புஞ் சீலமும் பெற்றிலங்கும் நாட்டினா, பிறர்போல் தமது பழக்கங்களைக் கைவிட முடியாமலிருப்பது இயற்கையேயாயினும் மாறுதல்களைக் கைக்கொள்ளாவிடின் மாளுதல் திண்ணமாகையால், புதியவற்றில் தமக்குப் பொருத்தமானதை அவர் விரைந்து தழுவல் வேண்டும். அங்ஙனஞ் செய்தற்கு முற்காலத்தையும் தற்காலததையும் பற்றிய உண்மையான அறிவு அவசியம்.

(“இக்கரை மாட்டிற்கு அக்கரை பச்சை” என்பது நமது தமிழ் மக்கள் வழங்கும் ஒரு முதுமொழி. “தூரத்தி

லிருப்பவை பார்வைக்கு அழகாகத் தோன்றும்" எனுங் கருத்தமைந்த ஓர் ஆங்கிலப்பழமொழியும் வழக்கத்திலுண்டு. இப்பழமொழியும் ஆன்றோர் அனுபவித்துரைத்த அரு மொழியென்று அனைவரும் ஒப்புக்கோடற் குரியதொன்றே யாம். இதுபற்றி நோக்குமிடத்து, அண்மையது அரிதே னும் எளிதாகத் தோன்றலும், சேய்மையது எளிதேனும் அரிதாகத் தோன்றலும் உலகவியற்கை என்பது புலனும். "நாட்டிற்கு அதிகாரியேனும் வீட்டிற்கு மகன்தான்" என்ற பொருளுடைய ஆந்திரப்பழமொழியிலும் இக்கருத்துக் காணப்படுகின்றது. இதை அறிவுடையோர் உண்மை யெனக் கொள்ளார். தோற்றங்களை உண்மை யென்று கொண்டால் மின்னுவதெல்லாம் பொன்னென்று கொள்ள லும் வேண்டும். ஆதலின் தூரத்தினலுஞ் சமீபத்தினலும் பிறக்கும் பொய்க்காட்சியை அகற்றினலன்றி உண்மை விளங்குவதில்லை. உதயகாலத்திற் கீழ்த்திசையிற் சிவந்து திரண்டு தோன்றிய கதிர்ச்செல்வனைத் தீங்கனி யென்று கருதி நுகர்தற்கு அவாவி, விண்மிசைப் பாய்ந்து வெப்பத் தாற் றுக்குண்டு விழுந்த அனுமன்செய்தி, தோற்றத்தால் மயக்க முறுவோர்க்கு ஓர் எச்சரிகையாகும். பார்வைக் கினிதாய்த் திகழும் நீலநிறமுடைய ஆகாயவெளியும் பேய்த் தேர் போன்ற தொரு தோற்றமேயன்றி, உண்மை யன் றென்பதை அறியாதார் யாவர்? கணித்தற்கும் மனத்தினற் கிரகித்தற்குங் கூடாத பெருந் தூரத்தில் ஆகாயத்தில் நீல நிறமுண்டாகிற தென்று நூலோர் கூறுகின்றனர். இவ் வாறே மிகத்தூரமான புராதன காலமுந் தோற்றமாத்திரை யான் நோக்குவார்க்குப் பலவகை இனிய காட்சிகள் அமைந்த அற்புதமாய் விளங்கவுங் கூடும். அஃது உண்மை யென்பார் கூற்றுப் பயனிலதாய் ஒழியுமே யன்றி, மெய்

யுணர்தற்குச் சாதனமாகா தென்க. மேற்சொன்னவற்றால், இடத்தி லேற்படுஞ் சேய்மையால் நிகழும் பொய்த் தோற்றம், காலத்தி லேற்படுஞ் சேய்மையாலும் உண்டா கும் என்பது காட்டப்பட்டது.

சின்னாள் முன்னா மாண்டொழிந்த உறவினரோ அன்றி நண்பரோ எவரையேனும்பற்றி நாம் பேச நேருங் கால், அவரிடத்துள்ள நற்குண நற்செயல்களையே நாம் பெரி தும் விரித் துரைப்பதும் ஏனைய தீக்குண மாதியவற்றை மறைப்பதுமே நம்மவருட் பெரும்பாலும் வழக்கமாகக் காண்கிறோம். பகைவரும் அவரைக் குறித்து நிந்தைகூற அஞ்சுகின்றனர். அவரை நிந்திப்போரைக் காணினும் அவர் மாட்டு நமக்கு வெறுப்புண்டாகிறது. அன்றியும் நாம் அம் மொழிகட்குஞ் செவிகொடா தொழிகின்றோம். இயன்ற வாறு அம்மொழி வெளிவராது அடக்கவும் முயல்கின்றோம். ஆகவே இறந்தவர் எத்தகையராயினும் அவர்பால் நாம் நல் லெண்ண முடையவராயிருக்க விரும்புகிறோ மென்பது வெளியாகிறது. இது பெரிதும் போற்றுதற் குரித்தேயன் றிக் கடிதற்பாற்றன்று. ஆனால் இதனைக்கொண்டு இறந்தா ரனைவரும் குற்றமின்றி நற்குணமுடையராகவே வாழ்ந்தன ரெனத் துணிதல் கூடுமோ? அவரும் நம்மைப்போல் இவ் வுலக வாழ்வில் ஈடுபட்டுத் துயரிழைத்துத் துன்பமுற்றும், நன்மை செய்து இன்பமுற்றும் பலவகையாக நாட்கழித்தன ராகவே வேண்டும். எனினுங் காலச்செலவாலும், நமது மானிட இயற்கையின் தன்மையாலும் அவரைப்பற்றிய அபிப்பிராயம் வேறுபடுகிறது. சிறிது காலஞ் செல்வதற் குள் இத்தகைய மாறுதல்கள் நிகழக் காணும் நாம் பல்லா யிரம் ஆண்டுகளுக்குமுன் நடந்தவற்றை ஆராய்ச்சியின்றி நோக்குவதால் எவ்வளவு அறியக்கூடும்! ஊன்றிப்பார்க்குந்

திறமையுடைய ஒரு சிலரே உண்மையுணரும் ஆற்ற லுடையவராவார். பண்டைநாளில் நிகழ்ந்தவற்றைக் குறித் துப் பேசும் நூல்கள் பல பிற்காலத்தவரால் எழுதப்பட் டமையின், அவற்றிற் குற்றங் குறைந்து குணம் மிகுந் திருக்கு மென்பது எளிதி லறியப்படும்.

பள்ளிச்சிறுார் கல்வி பயிலச் செல்லுங்கால் முகங் கோணி வெறுப்புடன் போவதும், பொழுது போவதற்கு முன் கல்விச்சாலையைவிட்டு நீங்கும் பிள்ளைகள் அகமலர்ந்து குதித்தோடுவதும் பெரும்பாலும் நமது பார்வையிற்படுங் காட்சிகளி லொன்று. சிறுவர்கள் தமது பள்ளி வாழ்க் கையை விரும்புவோரல்லர். ஆறும் வகுப்பிற் படிக்குஞ் சிறுவனுக்குத் தான் கற்குங் கல்வியும் படும்பாடும் மிகக் கடினமாய்த் தோன்றுகின்றன. அவ்வகுப்பைக் கடந்து அவன் மேலே செல்வானாயின் சென்ற ஆண்டில் அவன் உழைத்த உழைப்பு வெகு எளிதாகிவிடுகின்றது; ஏழாம் வகுப்பின் வேலையோ இரவும் பகலும் அவனை வருத்துகின் றது. இளமையின் சிறப்பையும் அருமையையும் இளையோர் அறியார். உயர்பதவியில் அமர்ந்து பெருந்தொகை ஈட்டும் பெரியோரைப் பார்த்து,மாணவர் தாமும்அவரைப்போலாக வேண்டுமென்றுமுயல்கின்றனர்.சிறுவர்க்குளதிர்நோக்கும், முயற்சியு மில்லாவிடின் அவர்மேன்மையடைவதெங்ஙனம்? ஆனல் மாணவனாயிருந்து தேர்ச்சியடைந்து, செய்தொழி லிற் சிறப்புற்றுப் பொருள் தேடி அதன் பயனெய்தி மூப் படைந்த ஒருவன், தன இறுதிநாளில் தன் வாழ்க்கையைப் பற்றி நினைக்கப் புகுந்தால், கற்புடைய மனைவியை மணந்து மகிழ்ந்து மக்களைப் பெற்றதையும், வருந்தி யுழைத்துச் செல்வந் திரட்டி அறஞ் செய்ததையும், வாழ்க்கையில் வரும் இன்னல்களைக் கண்டு நகைத்துத் தனதாற்றலால் இடையூறு

களை மேற்கொண்டதையும், பெரிதாகப் பேசாது, யாதொரு கவலையுமின்றிக் கண்டவற்றையுத் தின்று கண்களில் நீர் பெருகச் சிரித்து விளையாடித் திரிந்த கல்லா இளமையையே உவப்புடன் நினைந்து விரித்துரைக்கின்றான்.

“ இனிநினைந் திரக்க மாகின்று திணிமணற்
செய்வுறு பாவைக்குக் கொய்பூத் தைஇத்
தண்கய மாடு மகளிரொடு கைபிணைந்து
தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையென லறியா மாயமி லாயமொ
டுயர்சினை மருதத் துறையுறத் தாழ்ந்து
நீர்நணிப் படிகோ டேறிச் சீர்மிகக்
கரையவர் மருளத் திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து
குளித்து மணற்கொண்ட கல்லா விளமை
யளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ
தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்
றிருமிடை மிடைந்த சிலசொற்
பெருமூ தாளரே மாகிய வெமக்கே.” (புறம்-௨௪௩)

மேற்காட்டிய மனநிகழ்ச்சி ஒரு மகன் முதுமையடைந்த பின்னரே நிகழ்கின்றது. முதுமையில் இளமையை நினைந் திரங்குவது மக்கள் பண்பென்பது நாம் மேற்கோளாய்க் காட்டிய செய்யுளால் நன்குணரப்படும். பிறப்பு, வளர்ச்சி, மூப்பு என்பன ஒரு மகனின் வாழ்க்கைக்கேயன்றி ஒரு சனசமூகத்தின் வரலாற்றிற்கும் அடுத்தவையாதலின், ஆயுள் நீட்சியையுடைய ஒரு சனசமூகம் தனது பிள்ளைப்பருவத்தையே வியந்து போற்றி மகிழு மென்பது வெளிப்படை. இக்காலத்திற போராற்றலுடன் பெரும்புகழுடைய சில மேல்நாட்டினரைவிட இந்தியர்களாகிய நாம் மிகப் புராதன மானவர்க ளானமையின் அவர்களைவிட நாம் அதிகமாய்

நமது இளமையைப்பற்றி நினைக்கின்றோம். அவர்களின்னும் வயோதிக நிலையை யடையாததால் கல்வியில் மாணவர் போல் எதிர்நோக்குடையராய் ஊக்கம் நிறைந் திலங்குகின்றனர். நாமோ பின்னோக்குடன் இறந்த நமது இளம் பருவத்தை எண்ணி இரங்குகின்றோம். இன்னுஞ் சில நூற்றாண்டுகளில் அவர்களும் நம்மைப்போ லாயினு மாவர்.

விரிசடைக்கடவுள் கயல்விழிக்காரிகையை மணந்த அந்நாள், தேவரும் பிறரும் அத்திருக்கோலத்தை நக் கண்ணுறும் வண்ணமொருங்கே திரண்டு கைலையைச்சேர,வடபால் தாழ்ந்து தென்பாலுயர்ந்த தெனவும், அதுகண்ட ஒளிதிகழ் அழற்கணன் மகத்துவ மிகுந்த அகத்தியரை யழைத்து, "தென்பாலேகி வையகத்தைச் சரிநிலைக்குக கொணாக" எனக் கட்டளையிட்டன ரெனவும்; அவ்வாணையைச் சிர மேற்கொண்ட குறுமுனி தென்றிசை யடைந்து, அமரர்கள் வாழ்த்துங் குமரனையடுத்துத் தமிழையோதினரெனவும் புராணங் கூறும். மேறகாட்டியதில் தென்றிசை யென்பது தமிழ்நாட்டையும், வடதிசையென்பது ஆரியர் தேசத்தையுங் குறிப்பதாகக் கொண்டால், அக்காலத்தில் தமிழநாடு பலவற்றிலும் பலவாற்றானுஞ் சிறந்து விளங்கியதால் அஃது உயர்ந்தது என்று பொருள் கொள்வது சிறிது இசையும். இஃது எங்ஙனமாயினும், இக்காலத்தில் மேற்றிசையுயர்ந்து கீழ்த்திசை தாழ்ந்திருப்பது நிச்சயம். புனல் போக்கால் நிலக்கிடக்கையை எளிதி லறிந்து, வைகை, காவிரி முதலிய ஆறுகள் கிளம்புந் திசைக்கு மேற்கு (மேல்=உயர்ந்த) என்றும், இவை கடலிற் போய் விழுகின்ற திசைக்குக் கிழக்கு (கீழ்=தாழ்ந்த) என்றும் புண்டைத் தமிழர் பெயரிட்டனர்.

"செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை
காணிற் கிழக்காந் தலை"

என்னுங் குறளில் கிழக்கு என்பதற்கு அப்பொருள் வந்தமை காண்க. நிலத்தின் ஏற்றத் தாழ்ச்சியையொட்டிப் பிறந்த இத்திசைப் பெயர்கள் இப்பொழுது வேறு புதுப் பொருள்கொண்டு வழங்குதல் கூடும். ஐரோப்பியரையும் பிறரையும் நாம் மேல்நாட்டார் என்று அழைக்கும்போது நம்மினும் அவர் உயர்நதவரென்று சொல்லாமற்சொன்னது போ லிருக்கிறது. கீழ் நாட்டினரென்று அவர்கள் நம்மைப் பறறிப் பேசுங்கால் நம்மில் ஏதோ தாழ்வுண்டென்று கருதி அங்ஙனஞ் சொல்வதுபோ லிருக்கிறது. என்னே! இவ் விபரீதம்! ஞாயிறு படுந் திசையிலுள்ளோா எழும்பியதும், ஞாயிறு எழுந் திசையிலுள்ளோர் படுத்ததும் வியப்பென் பதில் ஐயமுண்டோ! ஆயினும், உலகம் உருண்டையா யிருப்பதால் நேர்மேற்காய்ச் செல்லுமொருவன் இறுதியிற் கிழக்கு முகமாய்த் திரும்பவேண்டிய தவசியம். ஆதலின், இந்தியா, சீனு, பாரசீகம், எகிப்து முதலிய நாடுகளிலிருந்து மேற்கே சென்ற செல்வமு மதிகாரமும் மறுபடியும் புறப் பட்ட இடததிற்கே வந்து சேருமென்று நம்பி எதிர் பார்த்தல் நன்று. முறகாலத்திற் கிழக்கு உயர்ந்திருந்ததி னுலுந் தற்காலததில் மேற்கு அந்நிலையி லிருப்பதாலும் இவற்றை இங்கெடுத்துக்கூற இடமுண்டாயிற்று.

தென்மொழியிலும் வடமொழியிலுமுள்ள தொன் னூல்களைக் கற்கப்புகுவோர் எவரேயாயினும் அவர் பண்டைக்கால ஒழுக்கத்தின் உயர்வையுங் குடிமுறைச் சிறப்பையும் அரசியலேற்றத்தையுங் கல்வியறிவின் நுட்பத் தையும் எத்திப் பேசாதிரார். நமது நாட்டையும் நாட்டின ரையும்பறறி நல்லெண்ண மில்லாதவரும், பழைய நமது நூல்களைச் சற்று உற்று நோக்கியபின் வேறு வகையாய் நினைப்பார்கள் என்பதிற் சந்தேகமில்லை. அவர்களிற் சிலர் நமது பழமையைக் குறைக்க முயன்ருலும் நமது நாகரிகத்

தையும் நல்லொழுக்கத்தையுங் குறித்து இழுக்குறையார் பண்டைநாட் சிறப்பைப்பற்றிப் பேசுங்கால், அந்நாள் இந்நாளுடன் ஒரு சிறிதும் இயைபில்லாத காலமெனச் சிலர் கொள்ளினும் ஆராய்ச்சியுடையார் அங்ஙனந் துணியார். பூ முற்றிறாற் காயும், காய் முதிர்ந்தாற் கனியுமாவது போன்று, எதிர்காலம் நிகழ்காலமாகி, நிகழ்காலம் இறந்த காலமாகும். நாளையென்ப தின்றாகி இன்றென்பது நெருநலாய் மாறுவதை உணர்ந்தார் யாரே முற்காலந் தற்காலத தினின்று முற்றும் வேறுபட்டதென் றுரைப்பார்! ஆகலின் மிகப்பழைய தொன்னாளும் ஒருகாலத்து நிகழ்காலமாயிருந்திருக்க வேண்டுமென்பதை உளத்திற் பதித்து இக்காலமும் விரைவில் முற்காலமாகு மென்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டும். இவ்வாறு நாம் நினையாமற் போவதால் வரும் பிழைகள் பல. கனியைக் கண்டு அதன் இனிமையை நுகர்ந்து உவப்படையும் ஒருவன், அது காயாயிருந்த பருவத்தில் இனிமை குன்றியிருந்திருக்கு மென்பதை மறத்தலும், காயைப் பார்தது அதன் உவர்ப்பையோ புளிப்பையோ எண்ணி வெறுப்படையும் ஒருவன் அது கனியாயின் இனிக்குமென்பதை மறத்தலுமாகிய இரண்டுந தவறே. நூறு ஆண்டுகட்கு முன்னிருந்தவர் தமக்கு நிகழ்காலமாகிய அக்காலம் அதற்கு முன்னுள்ள காலத்தைவிடத் தீமை மலிந்திருந்த காலமென அபிப்பிராயப்பட்டன ரென்பதற்குச் சான்றுண்டு. இப்பொழுது எழுபது வயதுடையவரா யிருக்குமொரு முதியோரை எடுத்துக் கொள்ளுவோம். அவர் இக்காலத்து வாலிபரின் கல்வியறிவுகளைப்பற்றிச் சொல்வது யாது?. "எங்கள் நாளில் நாங்கள் திடகாத்திரராய் அரியபல காரியங்கள் செய்தோம்; இக்காலத்து மக்கள் ஆறு மாதம் மருந்துண்டு பத்தியம் இருந்தவர்போல் தெரிகின்றார்; நாங்கள் கற்ற கல்விக்கு,

இவர்கள் கற்பது எந்த மூலைக்கு!" இவையனைய பல வார்த்தைகள் நமது செவியிற் சாதாரணமாய்ப் படுவன. ஆனால், கவனிக்க வேண்டியது இன்னொன்றுண்டு. இக் காலத்து இளையோர், இன்னும் எழுபது வருடங்களுக்குப் பின் வேறு சிறுவர்களை நோக்கி இத்தகைய சொற்களையே வழங்குவார்கள். என் தகப்பனார் என்னைப்பற்றிப் பேசியவாறே அவருடைய தகப்பனாரும் அவரைப்பற்றிப் பேசியிருப்பார்.

மக்கள் எந்நாட்டினராயினும் அவர்கள் அகத்தியற்கை யொன்றே. நிலத்தின் தட்ப வெப்பங்களால் உடையிலும் உணவிலுந் தோற்றத்திலும் பேதங்கள் சில ஏற்படினும் குணத்திலும் நடக்கையிலும் மக்கள் அனைவரும் ஒரு தன்மையரே. சமயலறைப் பல்லி கருநிறமுடையதாயும், சுண்ணும்படித்த வெள்ளைச் சுவரில் வசிக்கும் பல்லி வெண்ணிறமுடையதாயு மிருப்பதால் அறியாதார் இவற்றைப் பார்ப்பாரப்பல்லி என்றும், பறைப்பல்லி என்றும் பெயர் இடினும் அவை இரண்டிற்குமுள்ள நிறவேற்றுமை அவை வாழுமிடத்தின் நிற வித்தியாசத்தால் பிறப்பதென்பது திண்ணம். தோற்றத்தில அவை ஒன்றிற்கொன்று வேறு பட்டிருப்பதால் அவற்றின் தன்மை மாறி விடுவதில்லை. ஈராயிரமாண்டுகட்கு முன் நன்னிலை யெய்திய கிரேக்க, உரோம (Greek and Roman) நூலாசிரியரிற் சிலர், அந் நாளிலேயே தமது பழைய ஒழுக்கஞ் சிதைந்ததை நினைந்து வருந்தி வரைந்துளர். பதினாரும் நூற்றாண்டு ஆங்கிலப் புலவரும் அக்காலத்து இளமக்கள் பிறநாட்டு நடையுடைகளைப் பின்பற்றினமையைக் கண்டு வெகுண்டு கூறியிருப்ப துடன், தம் மூதாதைகளின் பழக்கங்களுட் பலவற்றைச் சிறப்பித்தும் பேசியுளார். இற்றைக்கும் அவ்வாறு

சொல்லுவோருளர். புகை வண்டிகள் முதலில் இங்கிலாந் தில் ஓடத் தலைப்பட்டபோது அவற்றைப்பற்றி அச்சமும் வெறுப்புமுண்டாயினவே யன்றிச் சனங்களுக்கு ஆவலுங் களிப்புந் தோன்றவில்லை. நீராவியால் இயக்கப்படுங் கப்பல்கள் முதன் முதல் ஐரோப்பாவில் வந்தபோது அவற்றைப் பேயின் இயந்திரங்களென்று பலர் புறக்கணித் தனர். கத்தியும் முள்ளுங் கரண்டியும் (Knife, fork and spoon) கொண்டுண்ணும் ஐரோப்பியர் நம்மைப்போற் கையாலுண்டுகொண்டிருந்ததைக் கைவிட்டு மூந்நூறு ஆண்டுகள்தான் ஆயினவென்பதை நம்மவரிற் பலர் அறி யார்; அவர்களிலும் பெரும்பாலோர்க்கு இது தெரியாது. கரண்டியும் முள்ளுங் கீழ நாடுகளிலிருந்து ஐரோப்பா விற்குச் சென்றனவென்று கூற இடமுண்டு. முதன்முதற் கரண்டியால் உண்டவரைக கண்டு பிறர் வெறுப்புற்று இழிமொழி வழங்கினரென்று மேல் நாட்டினர் தாமே வெளியிட்டிருக்கின்றனர். தேயிலை, காப்பி ஆகிய பானங் கள் ஐரோப்பியரால் உபயோகிக்கப்பட்டு வருவதெல்லாம் சென்ற இருநூறு வருடங்களுக்குள்ளேதான். இவை போல்வன இன்னுஞ் சில உள. இவற்றையெல்லாம் மேல் நாட்டார் எளிதிலேற்றுக் கொண்டதில்லை; பலவாற்றானும் இவற்றை முதலில் தடுக்க முயன்றனர். ஆகலின் 'பழை யன கழிதலும் புதியன புகுதலும்' அவசியமாயினும் அங்ஙனஞ் செய்வது மக்களெல்லோருக்கும் தொடக்கத் தில் திகைப்பைத் தருமேயன்றி உவப்பை அளிப்பதில்லை. ஆயினும், துணிவும், எதிர்நோக்குமுடைய சிலர் புதிய வற்றை ஆரம்பஞ்செயது பிறரையுந் தம்மாட்டு ஈர்த்துக் கொள்வர். இதுவே உலகெங்கும் முறையென்பது இன்னும் ஓர் உதாரணத்தால் நன்கு புலப்படும். உயிர் வகைகளின் தோற்றம் (Origin of species) என்னும் அரிய நூல் வெளிப்

பட்டகாலை உயிர்நூல் வல்லாரும், மதசாத்திரப் பண்டிதரும் அதன்கண் புதிதாயப் புகட்டப்பட்ட சில உண்மைகளைக் கண்டு நடுங்கி, அவற்றால் உலகிலுள்ள பற்பல கொள்கைகளுக்கு எண்ணிறந்த தீங்கு விளையுமென்று அச்சிலும் பேச்சிலும் பெருங்கூச்சலிட்டனர். இதனாற் சண்டமாருதம்போற் பெருவாதம் நிகழ்ந்தது. இவ்வாதத்திற் கோபமாகிய அனல் மூண்டு எரிந்ததேயன்றி அறிவாகிய ஒளி அதிகமாயப் பிரகாசிக்கவில்லை. மனிதருக்கு மனக்குழப்பம் முன்னினும் அதிகமாயிற்று. உயிரவகைகள் எங்ஙனம் உண்டாயினவென்று எடுத்துக்காட்டிய உண்மைகளைப் பரிசோதித்து, மறுக்கவியலாமல், அவ்வுண்மைகளை அங்கீகரிப்பதால் வருங் கேடுகளைப் பெருக்கி வருணித்து நூலாசிரியரையும் அவர்க்குச் சார்பாய் நின்றவரையுங் கடுமொழிகளாற் கண்டித்தனர். இப்பொழுதோ சகலவித சாத்திரங்களிலும் அவ்வுண்மைகளை ஏற்றுக்கொள்ளாதார் இலர் என உறுதியாயக் கூறலாம். உயிரவகைகளின் தோற்றத்தை இயற்றிய சாலப் பேரறிஞராகிய டார்வின் (Darwin) என்பவருடன் ஒருகாலத்தவரும், அரசியல், தேச சரித்திரம் இவற்றைப்பற்றி நுண்ணிய நூல் பல செய்தவருமாகிய கார்லைல் (Carlyle) மேற்சொன்ன புத்தகத்தைக் கேள்விப்பட்டு அதன்மீது குன்றாத பகை பாராட்டி, அதைத திறந்து பார்க்கவும் இணங்காதாராயினர். ஆயினும், உண்மையை எதிர்த்துநின்று மாய்க்க வலலவர் எவருமில்லை. இதைக் கார்லைல் தாமே, தாம் வரைந்தவற்றுட் பலவிடங்களில் ஆணி அறைந்தாற்போல் கூறியிருக்கின்றனர். இகழினும், பழிக்கினும், எதிர்க்கினும், பகைக்கினும் உண்மை உயர்ந்தோங்கி வளருமென்பதை உலக சாத்திரம் கையிற் கனிபோற் காட்டும். எனினும், புதிய உண்மைகளைப் போற்றி ஏற்றுக்கொள்வார்

கற்றோருள்ளும் வெகு சிலரே. தற்காலத்தைப்பற்றிச் சிறிதும் கவலைப்படாமல் முற்காலத்திலேயே மனவாசஞ் செய்யும் பெரியோருமுளர். பிரபல ஆங்கிலப் புலவர்களாகிய சர். உவால்டர் ஸ்காட் (Sir Walter Scott), உவில்லியம் மாரிஸ் (William Morris) போன்றவர்கள் தாமிருந்த பதினெட்டாம் பத்தொன்பதாம் நூற்றாண்டுகளின் நிலைமை தம் மனத்திற்கு அமைதி கொடாமையாலும், இன்னுஞ் சில முகாந்தரத்தாலும், முற்கால ஒழுக்கங்களில் ஈடுபட்டவராய்ப் பண்டை நாட்களில் நடந்தவற்றை இனிமையாய் விரிக்கும் நூல்களையே பெரும்பாலும் இயற்றிப்போயினர். ஆதலின், இறந்த காலத்தைப் பெரிதும் வியந்து மகிழ்தல் நமக்கே சிறப்பாகிய ஒரு பண்பன்று; பிறரைக்காட்டிலும் நம்மில் அது சிறிது மிகுந்து காணப்படுமென்பது நியாயங்களுடன் முன் காட்டப்பட்டது. புதியவற்றைத் தழுவிக் கொள்வதிலும் மேல்நாட்டார் மிகுந்த துரிதமுடையவரல்லரென்பதும் மேலே ஒருவாறு விளக்கப்பட்டது. மக்களது மனப்போக்கு எங்கணும் ஒன்றே.

மலர்களில் மல்லிகை, முல்லையாகிய இரண்டும் நறுமணமுள்ளனவாய் முகர்வதற்கு இன்பந் தருவனவாகவும், இவற்றுளுயர்ந்தது எதுவென வினவெழுப்பி நெஞ்சு புண்ணுவாரு முண்டு. நீலோற்பலம் செந்தாமரைபோல் இல்லையென்று இவர் கடிந்துகொள்வர். மாதுளை மாங்கனியைப் போல் இல்லையெனப் பகர்வதால் போந்த பயனென்னை? இத்தகையார் ஒன்றொடொன்றை ஒப்பிட்டுப் பார்த்து உயர்ந்ததிது தாழ்ந்ததிதுவென ஒரு முடிவிற்கு வந்தாலன்றிக் கண் துயிலார்போலும்! திருவள்ளுவரையுந் தொல்காப்பியரையுந் துலையிலேற்றிச் சீர்தூக்கி நிறையில் எவர் மிகுந்தவரெனத் துணியுந் துணையும் "என் தூங்கும் என்

கண் இரா" என்றிருப்போரை என்னவென்று சொல்வது? ஒவ்வொன்றும் அதனதன் இடத்திலுங் காலத்திலுஞ் சிறப்புற் றிலங்கு மென்பதை உணராதார்க்கு அறிவு கொளுத்துவது எங்ஙனம்? இவரனையர் துறவறத்தைப்பற்றி விரித்துரைக்கக் கேட்டு அதனினும் உயர்ந்த தில்லை எனப் பல பேசி நல்லறமாகிய இல்லறத்தை இகழ்ந்து நாப்பறையறைவர். "ஊழிற் பெருவலி யாவுள" என்று கூறிய வள்ளுவர் மொழியை வியந்து உவந்து நாவிற சுவைத்து விதியே பெரிதென்று கூத்தாடுவார்; "ஊழையு முப்பக்கங் காண்பர்" என்று குணகுன்றாகிய ஆசிரியர் மற்றோரிடத்தில் விளம்பியது அவர்கள் கண்ணிற படுவதுமில்லை; செவியில் ஏறுவது மில்லை. இவர் கோணிய மனத்தினர் என்பதில் ஐயமுண்டோ? ஊழும் முயற்சியுங் கூடிய இவ்வாழ்க்கையி லொன்றையே பாராட்டி மற்றொன்றை மறததல் பிழையாகும். எனினும், இவ்வாறு செய்பவரை நாடோறும் காண்கின்றோமன்றோ? ஒவ்வொன்றிற்கும் இருபுற முண்டென்பதை மறந்தாருடனும் மதியாருடனும் வழக்காடுவ தரிது. நடப்ப தெல்லாம் விதியின் செயலெனப் பகர்ந்து கடமையில் தவறுதல் குறுமதியாமாறே, நம்மாலாகாத தொன்றில்லை யெனச் செருக்கி ஊழை இகழ்தல் மடமையாகும். ஆதலின், முற்காலம் நன்று; தறகாலந் தீது என்று அடை மொழியின்றிச் சொல்வது அறிவிற்குப் பொருந்தாது.

ஒருவன் உலகில் இறந்தொழிந்தவரைக் கணக் கெடுப்பதிற் கவனத்தைச் செலுத்தி ஒவ்வொரு நாளும் மரணத்தைப்பற்றியே நினைவுடையவனா யிருந்தால், அகன்ற இப்புவி முழுதும் மனிதர் எரியுண்பதற்கும் புதையுண்பதற்கும் ஆக்கப்பட்ட பெரிய சுடுகாடாகவே தோன்றும். ஆனால்,

ஞாலத்தில் ஒவ்வொரு நாளும் பிறக்குங் குழந்தைகளைக் கணக்கெடுப்பதில் ஒருவன் தன் மனத்தைப் புகுத்தினால் இக்குழவிக ளெல்லாம் வளர்ந்து வாழ்ந்து பெருகுவதற்கு இவ்வையகம் இடந்தருமோவென அவன் மயங்குவான். இங்ஙனமே, முற்காலத்து மிகுந்திருந்த நன்மைகள் சிலவற்றையே இரவும் பகலும் எண்ணிக்கொண் டிருப்பவர்க்கு நாம் இருக்கும் இக்காலம் பசும்புல் முளையாத பாழ் நிலமாகத் தோன்றும். கடலில் ஒவ்வொரு நாளும் பிடிக்கப் படும் மீன்களின் தொகையை ஊன்றி நோக்கினால் சமுத்திரந் சிறிதுநாளில் மீனற்றுப் போகுமென்ற நினைவு ஒருவேளை தோன்றும்; ஆனால், ஒரு சிறு மச்சம் இடும் முட்டைகளின் தொகையைக் கருதினால் மீன்கள் பெருகுவதற்கு நெடிய ஆழியும் இடங் குன்றிப்போகு மென்று எண்ண நேரிடும். உண்மை இங்ஙனமிருக்க நல்லொழுக்கமும் கல்வியு முடைய சிலர் இறந்த நாட்களை நினைத்துக் கவற்சியுற்றுப் பின்வருமாறு இரங்காநிற்பர் :—“பண்டைநாள் மக்கள் ஞானமுங் கல்வியும் நிறைந்தோராய்த் தானமுந் தவமுஞ் செய்து இம்மை மறுமைப் பயன்களை இனிது நுகர்ந்தனர், இந்நாள் மனிதர் அறிவு தோன்றியது தொடங்கிஉயிர்க்கு இறுதிவருந்துணையும் வையகத்தின்வாழ்விலேயே மயங்கிக் கிடந்து, இன்னல் பல இயறறி இடையூறுற்று, அல்லும் பகலும் ஐம்புலன்களின் வழியே உள்ளத்தைச்செலவிட்டு,வினைக்கடிமைகளாகி வீணேள்போக்காநின்றனர். முத்தும் மணியும் பொன்னும் பிறர்க்கு ஈந்துவந்த செல்வரெங்கே? வளங்குன்று நிலமெங்கே? பொய்யா வான மெங்கே? அற்றைக்கும் இற்றைக்கும் இத்தனை வேறுபாடு ஏன்?” இங்ஙனம் இரங்காநிற்பவர் கூற்று உணரற்பாலது.

"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணமென்ப"

(பொய்யும் வழுவுந் தோன்றிய பிற்காலத்தே இருடிகள் கரணங்கள் கட்டினரென்று கூறுவர். கரணம் - வேள்விச் சடங்கு.) ஒல்காப்பெரும்புகழ் தொல்காப்பிய முனிவர் இவ்வாறு சூத்திரஞ் செய்தமையால் தம் காலத்தில் பொய்யும் வழுவும் இருந்தமையும், தமக்கு முன் ஒருகாலததில் அவை இலாமையையுங் குறித்தார். தொல்காப்பியருக்கு முன்னிருந்த நூல்கள் நமக்கு வந்தில; ஆனல்,அவறறில் பொய்யையும் வழுவையும்பற்றிய செய்யுட்கள் இருந்திராவென்று கூறுவதறகு இயலாது அற்றேல் பொய்யும் வழுவுமில்லாத காலங் கிடையாதுஎன்பதுதுணிபோவெனின்? அன்று;உலகததின் மானிடப்பிறவி தோன்றியஞான்று அதிலிருந்த மக்கள் தொகை மிகச் சிறிதே என்பது பலர்க்கும் உடன்பாடாகவின், அக்காலததவா ஒருவரை யொருவர் பகைத்துப் பொய்யுரைத்துப் பழிசுமந் திருப்பரென எண்ணவிடமில்லை. சிறிது குறையும் பிழையும் இருநதிருக்கலாம். தமக்குவேண்டியவை கிட்டா விடத்தன்றே மக்கள் களவாடிக் கபடஞ்செய்வர். தாம் விரும்பியவை எளிதிற் கிடைப்பனவாயிற்கபடஞ்செய்யக் காரணமென்னே? மனிதர்தொகை சிறிதாயும் அவர்கட்கு வேண்டிய நிலமும் பொருளும் ஏராளமாயும் இருக்கையில் சண்டையும்,வழக்கும்,பொய்யும்,வழுவும்எழ அவசியமில்லை; ஆனல், மக்கள் பெருகி வளர வளர அறிவாற்றலும் உடல் வன்மையும் உடையவர், பிறரைவிடச் சுகமும் செல்வமும் பெற்று வாழ்ந்திருப்பர். அதனல் பிற்காலத்தில் பொறாமையும் பகையும் பிறந்து தீயொழுக்கங்கள் நிலைபெற்றிருக்க வேண்டும். இஃது உலகந்தொடங்கிய சிலகாலத்துக்குள்ளாகவேநிகழ்ந்திருக்கவேண்டும்.அற்றைநாள் மக்கள் கவலையற்றுச் சுகித்திருந்தாரெனக் கருதுவது தவறு. வாழ்வதற்

குரிய வசதிகள் இன்மையால் அவர்கள் பெரிதும் வருந்தியிருப் பார்களென்பதில் ஐயமில்லை. அடர்ந்து வளர்ந்த உயர்ந்த மரங் களும், புகுந்து போவதற்கரிய புதர்களும் நிறைந்த இருண்ட அச்சமிகுந்த காடுகளிடையிலும், மலைக்குகைகளிலும் அவர் கள் வெயிலிற் காய்ந்தும் மழையில் நனைந்தும் முரட்டுத்தன மாகச் செய்யப்பட்ட மழுங்கிய கருவிகளைக் கையிற்பிடித்து வேட்டையாடி அகப்பட்டதையுண்டு காலங் கழித்திருப்பர்.

நடுக்கத்தைத் தரும் பெரிய உருவத்தை யுடைய கொடிய விலங்குகள் அக்காலத்தில் மிகுந்திருந்தன. இவற் றுடன் போராடுவதிலும் இரவில் இவற்றால் தாக்கப்படா மல் தம்மைக் காத்துக்கொள்வதிலும் அவர்க்குப் பலவகை யான துன்பங்களுண்டாகி யிருக்கு மென்பது எளிதில் உணரப்படும். ஆதலின், வையகத்தில் முதன்முதல் மனிதர் தோன்றிய நாளில் அவர்களது வாழ்க்கை சிறந்திருந்தது எனக் கூறல் பொருந்தாது. மக்கள் மிலேச்சர்களாய்க் கைக்கெட்டியதை உண்டு திரிந்த காலத்தைவிட்டு, அவர்கள் பெருகிப் பல வகுப்பினராய்ப் பிரிந்து அரசுகள் ஏற்படுத் திக் கல்வியும் ஒழுக்கமும் நிறைந்து விளங்கிய பிற்காலத்திற் றான் அவர்களது உயர்வையும் பெருமையையும் நாம் காண லாகும். தொல்காப்பியம் எழுதப்பட்ட நாளில் மனிதருக் கிருந்த துன்பங்களுந் தொல்லைகளும் இக்காலத்தில் நமக் கிருக்குங் கவலைகளுக்குந் துன்பங்களுக்கும் ஈடாகாவென் பதை நாம் ஒத்துக்கொள்ளலாம். ஆயினும், அன்றும் பொய்யும் வழுவும் இருந்தமை முன் சூத்திரத்திற் காட் டப்பட்டது. "ஆதி ஊழி கழிந்த முறையே அக்காலத்து அந்தந் தொடங்கி, இரண்டாம் ஊழி முதலாகப் பொய்யும் வழுவுஞ் சிறந்து தோன்றிய பிற்காலத்தே" என்று உரை காரர் கூறுமாற்றான் இதை அறிக. அன்றியும், இழிவு,

இழவு, வறுமை, மூப்பு, பிணி, வருத்தம், அணங்கு, விலங்கு, கள்வர், உறுப்பறை, கொலை, ஆறலைத்தல் முதலிய சொற்கள் தொல்காப்பியத்தில் ஆளப்படுகின்றமையால் பண்டை நிலைமையிலும் இவை இருந்தமை யுணரப்படும். திருக்குறளையும் இவ்வாறே ஆராய்ந்து வள்ளுவர் காலத்தின் நிலைமையையுங் கண்டுகொள்க.

இனி, தமிழரசர்கள் செங்கோலோச்சி நாடு புரந்ததை விரித்துக் கூறும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய வற்றைச் சோதித்தாலும், முன் கூறியவைக்கு முரண்படும் உண்மையொன்றும் புலப்படாது. இவற்றிலுங் கண்மூடி விழிப்பதற்குள் இருந்தவிடந் தெரியாது மறையுங் கள்வரையும், பேன் பிடித்த துணியுடுத்துக் கால் கொப்புளிக்கப் பாலைவனங் கடந்து பசியுடனே திரியும் பாவலரையும், கள்ளுண்டு மயங்கிக் களிப்போரையும், வழி மறித்துக் கொலை செய்து கொள்ளையாடுவோரையுங் காண்கிறோம். சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களிலும் இவை காணப்படும். இதுவரையுங் கூறியவெல்லாம் மிகத் தொன்மையான காலத்திலும் தீமை யிருந்ததென்பதைக் காட்டும்பொருட்டே யொழிய அக்காலத்தில் முன்னோ ரடைந்த உன்னத நிலைமையைக் குறைத்துச் சொல்வதற் கன்று.

இந்நாள் மக்கள் முன்னோரைவிட மிகக்கொடிய நிலைமையி லிருக்கிறார்களென்பது உண்மையே. காரண மென்னவெனின், பத்து வருடங்களுக்கு முன்னிருந்ததை விட இப்பொழுது அதிக மனிதரிருக்கிறார்கள். நூறாண்டு கட்கு முன்னிருந்தவர்களின் தொகை இப்பொழுதுள்ள வர்களின் தொகையைவிட மிகக் குறுகியதென்பதில் ஐய மில்லை. ஈராயிரமாண்டுகட்கு முன்னிருந்தவர் தொகை சாலச் சுருங்கி யிருக்குமென்பது வெளிப்படை. இதனைற்

பெறப்படுவ தென்னவெனின், காலப்போக்கில் மக்கள் முன்னிருந்ததைவிடப் பல்லாயிர மடங்கு பெருகியிருக்கிறார்கள். ஆனால் அவர்களுக்கு அவசியமான நிலமும் பொருளும் பெருகவில்லை. ஆயிரஞ் சதுர அடி அளவுள்ள ஒரு நிலததில் நூறு மரங்கள் வளர்வதற்கும், அதே நிலத்தில் ஆயிரம் மரங்கள் வளர்வதறகும் விததியாசமிருக்குமன்றோ? நூறு மரங்களுக்கு வேண்டிய உணவை ஆயிரம் மரங்களுண்டால் அவை வளர்ச்சியிலும் பருமனிலும் குறைவடைந்திருப்பது இயல்பேயாகும். இங்ஙனமே, மூன்று கோடி மக்கள் வசித்த நாட்டில் முப்பது கோடி சனங்கள் வசிப்பாராயின் அவர்களுக்குள் பொய்யும், போரும், பொறாமையும், வழக்கும் மலிந்திருக்குமென்பதில் தடையென்னவிருக்கிறது. முறகாலத்தின் சிறப்பையும், இக்காலத்தின் கொடுமையையும் நினைநது வருந்துவோா இதை மனத்திற் கொள்வாராக. இக்காலத்தில் துரைத்தனத்தார் ஒவ்வொரு வருடமும் வெளியிடும் நியாய விசாரணை வரலாறுகளில் கொலை, களவு முதலியவை பெருகுவதறகுக் காரணம் தேசத்தில் மழையிலாமையும் பஞ்சமுமேயென்று கூறுவதை நம்மிற் பலரறிவோம். இஃது உண்மை என்பது வள்ளுவர் நூலில் வான்சிறப்பு என்னும் அதிகாரத்தால் விளங்கும். அவ்வதிகாரமே முறகாலத்திலும் மனிதா பஞ்சத்தால் வருந்தியதுண்டென்பதைக் காட்டும். இறந்த நாட்களில் மாதம் மும்மாரி தவறாமற் பெய்து வந்ததென்று கொள்ளப் போதிய சான்றுகளில்லை. இறையனா ரகப் பொருளுரையில் பஞ்சத்திற் பிழைப்பதற்கென்று சங்கப் புலவர்கள் பல்வேறு நாடுகள் சென்றமை காண்க. முற்காலத்திலிருந்த சில உயிர் வகைகள் இப்பொழுதில்லை என்று உயிர் நூல் கூறுவதை மறுக்க முடியாது. உயிர் வாழும் சந்துக்கள் பெருகப்பெருக அவற்

றிற்கு வேண்டிய உணவு போதாமையால் அவை ஒன்றுடனென்று போரிட்டதில், வலிமையும் கஷ்டங்களைச் சகித்துக் கொள்ளும் தன்மையு முள்ளவை எஞ்சி நிற்க, மற்றவை ஒழிந்தனவென்பது உயிர்நூல் கொள்கை.

மனிதர் தமது அறிவாற்றலால் மற்ற ஜந்துக்களை மேற்கொண்டு பூமியில் அதிகாரஞ் செலுத்துகின்றனர். அவர்களுக் குபயோகப்படும் பசு, எருமை, நாய், குதிரை முதலியவற்றைக் காப்பாற்றி வைத்துக்கொண்டு, ஏனைய சிங்கம், புலி, கரடி, யானை ஆகிய இவற்றைக் கொன்றுவருகின்றனர் இதை விரியக்காண விழைவோர் முன்னே குறிக்கப்பட்ட உயிர்வகைகளின் தோற்றம் என்னும் நூலைப் பார்க்கவேண்டும். நாள் போகப் போக ஜீவனம் செய்வது முன்னிலும் அதிக வருத்தமாவதைக் கண்டபின் இந்நாளில் குற்றமும் பிழையும் அதற்கேற்ப மலிந்திருப்பதை நோக்கி எவரும் வியப்படையார். இங்ஙனமே, தொல்லுலகின மக்களின் ஒழுக்கத்தைப் பார்த்து நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. பொதுவாக இப்படிச் சொல்வதால் ஆன்றோரின் உயர்வை அறியாது எழுதினேனென்று கருதற்க.

வேற்றுநாட்டரசர் நம்மீது படையெடுத்து வந்து நமது பொருள்களைக் கொள்ளைகொண்டு போவதற்கு முன் பொன்னும் மணியும் சோறும் இங்கு மிகுந்திருந்த தென்பதை ஏற்றுக்கொள்ளத் தடையில்லை. அக்காலத்திற் புலவர்கட்கும் மற்றுங் கலைவல்லார்கட்கும் வேந்தரும் செல்வரும் இக்காலத்தவர் புருவந் தூக்கி வியத்தற்குரிய அத்தனை பொருட்குவை யளித்தாரென்பதும் ஒப்பத்தக்கதே. கல்வியும் ஒழுக்கமும் உயர்ந்தோங்கி யிருந்தன வென்பதற்கும் சான்றுகள் பலவுள. ஆனால் இந்நாளி லிருப்பதுபோல்

அறியாமையுங் கயமையும் முன்னுளிவில்லை யென்று கூறுவ தெங்ஙனம்? கோவலனைக் கொலை செய்வித்த பொற்கொல்லனும், கௌந்தியடிகள் நரியாகமாற்றிய கயவனும், புலி பிடித்தற்கு நிறுத்திய வலைக்குளோர் குறுநரி யகப்பட்டது போல் தன் காதலனுக்காக இரவில் காத்திருந்த பைந்தொடியிடம் வந்த முடமுதிர் பார்ப்பானும் (குறிஞ்சிக்கலி-கூரு) இருக்க, முன்னுட்களில் அறத்தாறன்றிப் பிறவாறில்லை யென்று இயம்பலாமோ? பண்டைக்கும் இறைக்குமுள்ள வேற்றுமை பெரிதாய்த் தெரிகிறதே யொழிய அவற்றிறகுள்ள ஒற்றுமை வேண்டிய அளவு நமக்கு விளங்குவதில்லை. மேல் நாம் காட்டியவை யெலாம் தமிழிலக்கியங்களை யொட்டியவை. நமதுநாட்டில் இவையன்றி இதிகாசம் புராணமென்ற வகைகளுள் அடங்கும் நூல்கள் பெருகியுளவால் அவற்றையுஞ் சிறிது நோக்குதல் நன்று.

புராண இதிகாசங்களைப்பற்றிய கொள்கைகளில் வேறுபாடு சாலவுங் காணப்படும். இக்கொள்கைகளை யாராய்ந்து ஒரு தீர்மானத்திற்கு வருதல் இங்கெடுத்துக்கொண்ட பொருட்கு இடையூறாய் நிற்குமாதலால் புராண இதிகாசங்களிற் கூறப்பட்டவையனைத்தும் உண்மை யென்ற கொள்கையுடன் மேற்சென்று பார்ப்போம். பாரத கதையை விரும்பிக் கற்போருடைய உளத்தில் அடிக்கடி தோன்றுவன யாவை? அருச்சுனனது விற்றிறமும், வீமனது உடலுரமும், கர்ணனுடைய கொடையும், கண்ணனுடைய மாயமுமாகிய இவையே. கறுத்துப் பருத்த யானைகளையும், மலைபோல் அசையுந் தேர்களையும்,காற்றினும் விரைந்து செல்லும் பரிகளையும், எண்ணுக்குட்படாக் காலாட்களையும் நம்முன் காண்கின்றோம்; ஐம்பத்தாறு தேசத்தரசர்களையும், அவர்களுடைய படை கொடி மாலை முரசு முதலிய சின்னங்

களையும், கண்ணிறைந்த கணவரைத்தேர்ந் தெடுக்கும் மங்கையருலாவும் மன்றங்களையும் பெரிதும் நினைக்கின்றோம்; பொன்னும் வெள்ளியும் பட்டும் மணிவகை யொன்பதும் மலிந்து கிடக்கின்றன. உண்மையே; ஆனால், பாண்டவரின் தந்தை வெண்பிணியனா யிருந்ததையும், துரியோதனன் தந்தை பிறவிக்குருடனாகியதையும், கீசகனது தீச்செயல்களையும், சராசந்தன் இயற்றிய கொடுமைகளையும் நாம் ஊன்றிப் பார்ப்பதில்லை. பகாசுரனுக்கு நாளும் ஒரு மகனை இரையாய்க் கொடுத்துவந்த ஊரரின் துன்பமும், அரவக் கொடியோன் செய்த சூழ்ச்சிகளும், ஐவரை மணந்த பைங் கொடியின் துயிலை அரசவையில் உரிய முயன்றதன் இழிவும் நம் அகத்தில் தங்குவதில்லை. பாண்டவர் காலத்திருந்த மக்களும் நம்மைப் போலவே உண்டு, உடுத்து, உழைத்து, உறங்கி வந்தார்களென்பதும், அவர்களுக்கும் நமக்கிருக்குமாறே துன்பமுந் துயரமும் துக்கமும் இக்கட்டும் இடையூறும் இடுககணும் இருந்தன வென்பதும் திண்ணம். பொய்யுங் களவுங் குடியும் தொன்னாளிலு மிருந்தன. இவற்றிற்கு எடுத்துக்காட்டாகிய வரலாறுகளைப் புராணங்களிலிருந்து ஒன்றொன்றாய் உரைப்பதிற் பயனில்லை. எக்காலத்திலும் நன்மையுந தீமையும் கூடியே யிருந்துவருகின்றன. அவை விரவியிராத கால மில்லையெனக் கூறுவதிலுங் குற்றமில்லை புராணகாலத்தோர் சில துறைகளில் நம்மைவிடச் சாலச் சிறப்படைந்திருந்தனா என்றொருவருரைப்பாராயின் அதற்கெதிராக நாமொன்றுஞ் சொல்லோம். ஆனால், அந் நாட்களில், நிறைவேயொழியக் குறைவென்றது கிடையாது; இன்பமே யொழியத் துன்பமென்பதில்லை எனச் சாற்றுவோர் கூற்றையே நாமிங்கு மறுப்பது.

கன்னெஞ்சினராகிய மெய்வலி மிகுந்த மைந்தர்கள் (அரக்கர்கள்) இஞ்ஞாலத்தினரை வருத்தியது பண்டையில்

நடந்ததேயன்றே? இராமாயணத்தில் இலக்குமணனுடைய ஒப்பற்ற உடற்பிறப் பன்மையும் அடக்கமுடைமையையும் பார்த்துப் பெருமகிழ் வெய்தும் நாம், தன்மகன் வேந்தனுகும் பொருட்டுக் கைகேயி செய்த சூழ்ச்சியையுங் கண்டு வருந்த வேண்டியதாகின்றது. கலியுகமென்று பழித்துப் பேசப்படும் இக்காலத்திலொரு சிற்றன்னைசெய்வதிலிருந்து இது சற்றேனும் வேறு பட்டதாமோ? இராவணனிடமிருந்த சீதையை இராமன் தன்னுடன் வைத்திருக்கக் கூடாதென்று கூறிய வண்ணனுடைய அறிவைப்பார்ப்போமாயின், அஃது இக்காலத்திலுள்ள ஒரு கீழ்மகனது அறிவிற்கு எள்ளளவும் மேம்பட்டதென்று சொல்ல வியலாது.

காட்டில்தனியாயததவித்துநின்ற தமயந்தியை வலிந்து கூடவிழைநதவேடன் இக்காலத்தவனே, முறகாலததவனே? அரிச்சந்திரனுடைய மனைவியையும மகனையும் கடுஞ்சொற் கூறி வாட்டிய காலகண்டன கடையூழிப்பட்டவனே? இவற்றல் அறியக்கிடப்பதென்னவெனின், நாள் மாறுபட்டமையால் மாந்தர் முற்றும் வேறுபடவில்லை. மக்களியற்கை பெரும்பாலும் எஞ்ஞான்றும் ஒன்றுகவே யிருக்கின்றது. நன்மையை இடையறுது கடைபிடித்துத் தீமையைவெறுத் தறுத்தொழிப்பதே மக்கட்பிறவியின் நோக்கம். இந்நோக்கத்தை முன்வைத்து எந்நாளவருந் தங்கள் அறிவிற்கேற்ப உழைத்து வந்திருக்கின்றனர். உண்மை இன்னதென் றறியாது, மயங்கித தீமையே இனிமையெனக் கருதினரும் முன் போலவே இன்றும் உளர். ஆதலின் இப்போது உண்மையில்லை, உயர்வில்லை, அறமில்லை, ஈகையில்லை என்று சொல்லித் திரிபவர் மேற்கூறியவற்றைச் சிறிது ஆராய்வாராக. சிறிதேனும் ஊன்றி நோக்காது இந்நாள் மக்களில் குற்றமே தவிரக் குணமொன்று மில்லையென்று பிதற்றுவத

ஞல் விளையுந் தீங்கிற்கு அளவில்லை. இந்நிலப்பரப்பில் நன்மையே கிடையாதென் றெண்ணி அதைப் பிறருக்கும் போதித்துவரும் ஒருவன் எங்ஙனந் தனது வாழ்க்கையில் உண்மையைச் சொல்லி நன்மையைச் செய்யப்போகிருன்? கற்றவனொருவன் தன்னைப்போல் பிறருங் கற்றுளரென்பதில் ஐயப்படுவதில்லை. உண்மைபேச முயலும் ஒருவன் பிறரும் அங்ஙனமே செய்ய முயல்வாரென்று எண்ணுவானென்பதிற் சந்தேகமென்ன விருக்கின்றது.

'காமாலை யுடையவனுக்குக் கண்டதெல்லாம் மஞ்சள்;' இவ்வண்ணமே ஒவ்வொருவனுந் தன்னுளத்தில் உள்ளவற்றையே வெளியிற் காண்கின்ருன். உலகிற் செம்மையும் நன்மையுமில்லை யென்பவன் தனக்குச் செந்நோக்கும் நல்லெண்ணமு மில்லை யென்பதை முதலில் ஒததுக்கொள்ள வேண்டும். இவ்வூழியில் ஒழுக்கமும் ஒடுககமும் அடக்கமும் கிடையாவெனப் புகல்வோர் தம்மில் அவை இல்லையென்பதை வெளியிடுகின்றனர். மக்கள் ஈடேறவேண்டுமென்ற எண்ணத்துடன் உரைப் பெருக்கம் செய்பவர்களே இவவாறு ஆராய்ச்சியில்லாத சொற்களைப் பெரிதும் வழங்கித் திரிகின்றனர். இதனுல் மக்களுந தம் நிலையறியாது கலங்குகின்றனர். முன்னூழி மாந்தரினின்றும் நாம் முறறும் வித்தியாசப் பட்டவாகளாயின் அவர்களுக்குச் சொல்லப்பட்ட வேதாகமங்களை நாம் எங்ஙனம் உணர்ந்து பயன் பெறக்கூடும்? மறை முடிவுகளை யெடுத்துக்கூறும் நூல்கள் நமக்கு என்ன உதவியைச் செய்யக்கூடும்? அரிச்சந்திரன் வரலாற்றை வாசிப்பதால் நாம் பெறும் பயனென்னை? ஆகையால், முன்ஞட்களிலுள்ள உயர்வைப்பற்றி நினைக்கும்பொழுது அங்குத் தோன்றும் கீழ்மையையும் நாம் மறக்கக்கூடாது; தற்போழ்தைய தாழ்மையைக் குறித்து வருந்துவோர் இன்னும்

நல்லவர்கள் இருக்கின்றார்களென்பதை யுன்னி ஊக்க மடையவேண்டும். முன்னோர்களைப் போன்ற மக்கள்தாம் நாமும் என்ற நம்பிக்கை நமக்குண்டாக வேண்டும். அங் ஙனமாயின் முன்னோர் பெரியோர்செய்த அரிய செயல்களை நாமும் நிகழ்த்துதல்கூடும். அப்பொழுது அரிச்சந்திரர் களும், இலக்குமணர்களும், சந்திரமதிகளும், சீதைகளும் நம்மில் புதுமையாகத் தோன்றுவார்கள். அங்ஙனமின்றி ஒருவன் "நான் கலிநாட்டபட்டவன்; முன்னோர் சொன் னதை யறியேன்; அறியிற் சிறியேன்; என்றால் யாது கூடும்? மனைவிமக்களைக் காப்பாற்றுவதே இரவும் பகலும் கவலையாயிருக்க என் வாழ்க்கையில் உயர நோக்கங்களைக் கையாளுவதெப்படி?' என்று தனக்குள் சொல்லிக்கொள் வானாயின் நம்மவர் முன்னேற்றம் அடைவதெங்ஙனம்?

இனி, முன்னோருடைய சீரையுஞ் சிறப்பையுங்காலையும் மாலையும் பெரிதும் போற்றியுரைத்து இறப்பிலும் பிறப் பிலும் உண்பதிலும் உடுப்பதிலும் அவர்களுடைய சடங்கு முறைப்படிசெய்ய முயல்வோரை நாம் பெருகக் காண்கின் றோம். ஆனால் உண்மையிலும் செம்மையிலும் அவர்களைப் போலிருக்கவேண்டுமென்னும் பற்றும் அவர்களுக்கு இருந் தாலன்றிச் சடங்குஞ் சாஸ்திரமும் பயன்தரா.வாய்மையால் வரும் அகத்தூய்மை இல்லாவிடத்து நீரால் அமையும் புறத் தூய்மை என் செய்யும்? இதுகாறும் நாம் கண்டவற்றால் நமது மூதாதைகளுக்கும் நமக்கிருக்குமாறே இடர்களுங் கவலைகளுமிருந்தனவென்பது விளக்கப்பட்டது. இன்னுஞ் சில கூறுவோம். பலவகை நோய்களினால் அவர்கள் வாட்ட முற்று வருந்தியது மருத்துவ நூல்கள் தொன்றுதொட்டு வழங்கிவருவதால் நன்கு வெளியாகிறது. மான்,மரை, பன்றி முதலியவைகள் பயிர்களை யழித்து வேளாளர்களுடைய

உள்ளங்களைப் புண்படுத்தியது மன்னர்கள்முன் குடிகள் வந்து முறையிட்டதால் தெரிகிறது அந்நாளில் ஆறிலொரு கடமை எளிதானதன்று. பசியும் பகையும் முன்னோர் அறியாதவை யல்ல.

இனி, இவற்றின் முடிவைக்காண்பாம். நெருப்புக் குளிர்ந்தும், கல் கனிந்தும், கரும்பு கைத்தும் எக்காலு மிருக்கவில்லை. ஞாயிறு குறைந்தும் வளர்ந்தும், திங்கள் மாறாது நிறைந்தும் எப்போதாயினும் இருந்தனவாக மொழிவாரிலர். இமயமும் விந்தியமும் இன்றிருக்கு மிடத்தில் முன்னும் இருந்தன; கங்கையும் காவிரியும் மேற்கிலிருந்து கிழக்கே முன் பாய்ந்தவண்ணம் இன்றும் பாய்கின்றன; தமயந்தி கண்டு மகிழ்ந்த செந்தாமரை நமக்கும் பூக்கிறது; சீதைக்கு வீசிய நறுமணத்தை, மல்லிகை மலர் நமக்குந் தருகின்றது; மஞ்சளும் வாழையும் வேறுபடவில்லை; தென்றலும் கொண்டலும் மாறவில்லை; தேன் வேம்பாகவில்லை; பால் நஞ்சாகவில்லை; ஒருமை பன்மையாகவில்லை; பெருமை சிறுமையாகவில்லை. இறந்த காலத்தைக்கொண்டு நிகழ்காலத்தை யறிந்து எதிர் காலத்துக்கு வேண்டியவற்றைத தேடிக் கொள்வோம். இறந்த காலததில் மூழ்கி நிகழ்காலத்தை மறப்பதும், நிகழ் காலததையே கருதி எதிர்காலத்தை மறப்பதும் தவறு. எதிர்நோக்கின்றி வாழ்வ தரிது.

# 5. இறந்த நாட்கள்

கழிந்த நாட்கள் திரும்பி வாரா; அவற்றைப் பற்றிய நினைவோ மாய்வதில்லை. "இறந்ததைப்பற்றி நினைப்பது வீண்; வருவதைக் குறித்துக் கனவு காண்பதும் வீண்; இற்றைப் பொழுதை ஏற்றவாறு வழங்குவதே நன்று" என்று சொல்வாருளர். இது தவறென்று யாம் சொல்ல வியலாது ஆயின், இறந்த நாட்களைப்பற்றி நினைப்பது தவறோ? எனின், அதுவுந் தவறன்று. அளவு கடந்து இறந்ததைநினைந்து ஏங்குவதும், வருவதை எண்ணிக் காலத்தைக் கழிப்பதும் இழுக்காம் அளவுபட இறப்பையும் எதிர்வையுங்குறித்து அவ்வப்போது நினைத்தல் பயனளிக்கக் கூடியது. இறந்ததை முற்றும் விலக்க வேண்டுமென்போமாயின் நினைவென்பதையே ஒழிக்கவேண்டும்.

நினையாத நேரங்களில், ஒரு மணத்தால், காட்சியால், ஒலியால், ஒருவரது சொல்லால், எனது உளம் நிகழ்காலத்திலிருந்து நீங்கி, இறந்த எனது இளமைக்குச் செல்கின்றது. வாழைப் பூவின் மணமும், இளஞாயிறு புல்வெளிகளிற் காயுங் காட்சியும், மடைகளில் ஓடும் நீரின் ஓசையும் முப்பத்தைந்து ஆண்டுகட் கப்பால் எனனைத் தூக்கிக்கொண்டு செல்கின்றன. இளமைமீ தோடிய உளம் எளிதில் அதை விட்டு நீங்குகின்றிலது. என்னை யான்மறந்து ஓர் இளைஞனாகிவிடுகின்றேன். உளத்தில் இத்துணை எளிதாகத் திரும்பி வருகினற இளமையவா, உடலினுந் தோன்றுமாயின் எவ்வளவு நன்றாயிருக்கும்! மலைச்சாரல்களிலுங் குளக் கரைகளிலும் உணவையும் மறந்து ஓடித் திரிந்தவாறு இனறும் எனது கவலைகளை மறந்து யான கும்மாளம் போடக் கூடுமாயின, இறைவனே உனனை யான் வாழ்த்

தேனோ? உயிருடனிருப்பதே ஓர் இன்பமாயிருந்த அவ் இளமையின் மாட்சி என்னே! என்னே!

'மடமகனே, உளத்தில் திரும்பி வருகின்ற இளமை உடலினுந் தோன்றுமாயின் நன்றாயிருக்குமென்று எங் ஙனந் துணிந்து சொல்வாய்? மறுபடியும் இளமை வருமாயின் முன்னைவிட நேர்மையான முறையில் அதை நீ வழங்குவாயென்ற உறுதி என்னை? இளமையுடன் அறியாமையுந் திரும்பி வரவேண்டுமன்றோ? நீ பெற்ற கல்வியையும் நுகர்ச்சியையும் நீக்கி இளமைமட்டும் பெறுவதாற் பெரிய பயனொன்றும் வராது' என்று எனது உளமே சொல்கின்றது. நன்று; ஆயினும், கல்வியும் நுகர்ச்சியும் இளமையின் உணர்ச்சிகளைப் பொன்போற் போற்றுவிடின், அவற்றை நீக்கி இளமை பெறுவதே சிறந்ததென்று தோன்றுகிறது. இதன் காரணத்தைப் பின்னர் மொழிவேன்.

இறந்த நாட்களைப்பற்றி நினைக்குங்கால், அரிய காலத்தைக்கொன்னே கழித்த மடமையும், பொன்னனைய தருணங்களைக் கைநழுவவிட்ட பேதமையும், நெறிதவறி; நடந்த வெட்கமும் உளத்தில் தோன்றியே தீரல் வேண்டும். இளமையிற் சிறுமை இயல்பே. முதுமையில் இளமையைக் குறித்து எண்ணும்பொழுது பெரும்பாலும் நமது நினைவு நமது தவறுகள்மீதும் புன்செயல்கள்மீதும் செல்வதில்லை. காலப்போக்கின் வியத்தகு தன்மைகளுள் இதுவொன்று. இறந்தகாலததில் நிகழ்ந்தவற்றுள், எவை நமக்கு இன்பத்தையும் அமைதியையுந் தருகின்றனவோ அவற்றின் மேலேயே நமது நினைவுகள் உறைகின்றன நாம் செய்த பிழைகளும், நாணுதற்குரிய செயல்களும் நாளாவட்டத்திற் குறைந்து மறைகின்றன. எல்லா உயிர்கள்மேலும் ஓவா இறக்கங்கொண்ட செம்பொருள் · மக்கட்கீந்த

பேருதவிகளில் ஒன்றாக இதை நாம் கருதவேண்டும். ஏனெனின், எள்ளுதற்கும் நகுதற்குமுரிய செய்திகளைப் பற்றிய நினைவு, அச்செய்திகளை நாமியற்றியகாலை எத்துணை ஆற்றலுங் கூர்மையு முடையதாயிருந்ததோ அத்துணை ஆற்றலுடனுங் கூர்மையுடனும் முதுமையில் தோன்று மாயின் வாழ்க்கை என்பதே ஒரு பாடாக முடியும்; நினைவென்பதே தாங்குதற்கரிய ஒரு தீங்காகும் காலங் கழியக் கழிய வாழ்க்கையின் பள்ளங்கள் நிரப்பப்பட்டு, மேடுகள் முன்னினும் உயர்ந்து விளங்குகின்றன.

அயல்வீட்டிற் கொடுத்த தின்பண்டத்தை உண்டதோ டமையாது, அதிலொரு பகுதியைக் கையில் வைத்துக் கொண்டு வீட்டிற்கு வர, அன்னை கண்டு வெகுண்டு செங் கோல் செலுத்தியதும்; விடுமுறைக்கு வீட்டிற்கு வந்த யான் திரும்பவும் பள்ளிசெல்ல மறுத்தபொழுது தந்தை தாண்டவம் புரிந்ததும்; அக்காலை எனது சிற்றுளம் பொறுத்தற்கரிய துன்பத்தி லாழ்ந்ததும்; பதினைந்து பதினு ருண்டில் பள்ளி நண்பர் சிலரது தூண்டுதலாற் பகர்தற் கரிய தீச்செயல்கள் புரிநததும்; அதற்குமேல் நடந்த நாணுதறகுரிய நடக்கையும், இப்பொழுது முன்போல் உள்ளத்தைப் புண்படுத்தவில்லை. இவைகளைப் பற்றிச் சில வேளைகளில் விளையாட்டாகப் பேசவும் உளம் இசை கின்றது. இன்னுஞ் சில நாட் சென்றபின், இவை கருத்திலிருந்து நீங்கினும் நீங்கும். இவை போல்வன வற்றையே வாழ்க்கையின் பள்ளங்கள் என்று முன் கூறியது.

ஆனால், முதன்முதற் கடலைக் கண்டபோது என் உளங் குதித்தெழும்பிக் கரைகாணு இன்பமும், ஆழமறியா அச்சமும் எய்தியதும்; இலைகளின்றி மலர் இணர்கள்

நிறைந்து செவ்வானம்போல் தோன்றிய ஒரு முருக்க மரத்தைக் கண்டு சொல்லொணாத் ஓர் உணர்ச்சி மேலிட்டு யான் கூத்தாடியதும்; எனது பள்ளிக்கூடக் காற்பந்து விளையாட்டுக் குழுவின் (Foot ball team) தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பந்தயத்தில் யான் முதன்முதற் பெற்ற வெற்றியின் உவகையும்; அதுகாலை எனது தோழர்கள், சண்டையில் வென்ற சேவல் வீட்டுக்கூரையில் ஏறி நின்று கூவுவதுபோல் தொண்டை சுவறக் கூவி வெறித்தவர் போல் குதித்ததும், இப்பொழுது முன்னைவிட அதிக இன்பத்தைத் தருகின்றன. இவற்றின்மேல் உளம் ஆவலுடன் செல்கின்றது. இவை போல்வனவற்றையே வாழ்க்கையின் உயரங்கள் என்று முன் சொன்னது

இறந்த காலத்திற்கும் நிகழ் காலத்திற்கும் நடுவே இடை வெளியொன்று மில்லை. ஆதலின் முதுமையில் ஒருவர் இளமையி லிருந்து நீங்கி நிற்கவேண்டிய காரணமே கிடையாது. எவாகளுடைய முதுமை இளமையோடு ஒட்டி இருக்கிறதோ அவாகளே ஞாலத்திற்கு நன்மை செய்யக் கூடியவர். எங்ஙனமெனின், மக்களெல்லோரும் ஒரு கூட்டத்தவர் என்பது இளமையிற கல்வியினுதவி யின்றி நம்மா லுணரப்பட்டது. ஒரு பிள்ளை மற்றொரு பிள்ளையையுந் தன்னைப் போலவே நினைக்கிறது. பிள்ளைகள் ஒருவர் அழுவதை ஒருவர் கண்டு அழுகிறார்கள். பிறருடைய நன்மை தீமைகளைத் தங்களுடைய நன்மை தீமைகளாகக் கருதுவது இளமையில் இயற்கையாகவே அமைந்து கிடக்கிறது இளைஞர்கள் வறுமையாலுஞ் செல்வத்தாலும் வரும் வேற்றுமைகளை அறியார். கனிந்திருக்கும் இளைஞனது உளம் முதுமையிலன்றோ கல்லாகி விடுகிறது! இறந்த நாட்களைப் பற்றி நன்கு நினைந்து பார்மின்.

நமது நாட்டிற் பெருந் தொகையினரான மக்கள் சாலக் கடிதில் முதுமை யடைந்து விடுகின்றனர். முதுமை யடைவது மன்றி இளமையின் உணர்ச்சிகளை அவர்கள் விரைவில் மறந்து விடுகின்றனர். இது நமது நாட்டின் வெப்ப தட்ப நிலையா லாவதென்று கூறுதல் கூடும். ஆயின், இதுமட்டும் போதிய காரணமாகாது. நமது பயிற்சியும் பழக்கங்களும் இதற்குத் துணையாகின்றன. இதுபற்றி விரித்துக் கூறப்புகின் இக்கட்டுரையின் நோக்கம் சிதையும்.

இளமையில் வையகம் நமக்கு எவ்வளவு இனிதாய்த் தோன்றியது! புல்லும், பூவும், மரங்களும், மலையும், குன்றும், தோப்பும் சொல்லரிய அழகுடையனவாயும் நம்மைத் தம்பால் ஈர்க்குந் தன்மையுடையனவாயு மிருந்தன. இத்தன்மை இப்பொழுது யாண்டுச் சென்றது? கடலும், வெளியும், விண்ணும், ஞாயிறும், திங்களும் முன் போலவேதாமிருக்கின்றன. அவற்றைக் கண்டு இன்பம் நுகரும் ஆற்றல் இறந்த நாட்களோடு இறந்தது சங்க நூல்களில் பொழிலும், பழமும், மக்க ளுறைவிடங்களும், பாலையும் நமக்குத் தீட்டப்படும் வகையை உற்று நோக்குவோமாயின், அக்காலத்துப் புலவர்கள் இளமை யுணர்ச்சி நிறைந்தவர்களா யிருந்தார்களென்பது நன்கு விளங்கும். சங்கச் செய்யுள்களிற் குறிஞ்சியும் முல்லையும் நெய்தலும் மருதமும் இன்பமொழுகுந்தகையவாய் நம்முன் கொணரப்படுகின்றன. ஆக்கியோன் உளத்திற்கிடந்த இன்பம் பாடலில் வெளிப்பட்டுக் கற்போன் உள்ளத்திற் கூட்டப்படுகின்றது. குறிஞ்சியையும் முல்லையையும் புலவன் இன்பத்தோடு பார்த்திராவிடின் அவை அவனது பாட்டில் இன்பந் தருவனவாய் நமக்குத் தோன்ற. இன்பத்துடன் இயற்கையை நோக்குதல் இளமையின் தன்மை. தன்

உளத்தில் தோன்றிய உணர்ச்சியைத்தான் புலவனொருவன் தன் செய்யுளைப் படிப்போர் உளத்தில் எழுப்புதல் கூடும். உணர்ச்சியின்றி வெறுங் கல்வித் திறத்தாற் பாடல் செய்வது உயிரற்ற உடலை அழகு செய்வதையொக்கும். இதுபற்றியே, கல்வியும் முதுமை நுகர்ச்சிகளும் இளமையின் உணர்ச்சிகளைப் பொன்போற் போற்றுவிடின் அவற்றை நீக்கி இளமை பெறுவது சிறந்ததென்று முன்கூற நேர்ந்தது. முன்னோர் செய்த நூல்களிலிருந்து சொற்களைமட்டுங் கற்றுக்கொண்டு, இச் சொற்களைப் புணர்த்தித் தம் புலமைகாட்டப் புகுந்ததனாலேயே பிற்காலத்துப் புலவர் பலருடைய பாடல்கள் சுவையற்றுப் போயின. "காரிகை கற்றுக் கவிதை பாடுவதினும் பேரிகை கொட்டிப் பிழைப்பதுமேல்" என்பதைத் தமிழர் பலர் உணர்ந்திலர். இன்பம் பயக்குஞ் செய்யுள் உளத்திலிருந்து வரவேண்டும். உளத்தை யறிவதற்கு இறந்த நாட்களை ஆராய்மின்; இளமையை விடன்மின். நமது நாட்டிறகோர் அணிகலமாய் விளங்குகின்ற இரவீந்திரநாத தாகூரின செய்யுளை யுற்று நோக்குமின்.

உவில்லியம் உவாட்ஸ்வர்த் (William Wordsworth) எனும் ஆங்கிலப் புலவர் தாம் இயற்றிய 'சாவாமையின் உணர்ச்சிகள்' (Intimations of Immortality) என்ற பாடலில், "இளமையில் நாம் இறைவனை அணுகி இருக்கிறோம்; ஆண்டுகள் செல்லச்செல்ல நாம் இறைவனை விட்டு அகல்கின்றோம்" என்று சொல்கின்றார். இஃது உண்மையன்று என்று யார் சொல்லக்கூடும்?

---

## 6. அரஞ்செய விரும்பு*

பூச்சாண்டிகளும் பேச்சாண்டிகளும் விலவிலத்து நடுங்கிப் போகும்படிச் செய்த என்னுடைய அருமைக் குருவாகிய பெரிய ஞையாண்டி, ஒருநாள் என்னை நோக்கி, "அரஞ்செய விரும்பு" என்று சொல்லி, இந்த வாக்கியத்தைப்பற்றிச் சிந்தித்துப் பார்க்கும்படிக் கட்டளை யிட்டார். அவருடைய கட்டளையைச் சிரமேற்கொண்டு, இரவு பகலாய் அவர் சொன்ன வாக்கியத்தைப்பற்றி யோசனை செய்து பார்த்தேன். ஆனால் நான் சிந்தித்து அறிந்த விஷயங்களை என்னுடைய குருவுக்குச் சொல்லுமுன் அவர் இறந்துவிட்டார். ஆகையால் நான் ஆராய்ந்து கண்ட அரிய உண்மைகளைச் சேர்த்து ஒரு புத்தகமாக இப்பொழுதான் எழுதி முடித்திருக்கிறேன். இதைப் பற்றி இப்பொழுது பேசவேண்டிய அவசியம் என்னவென்று கேட்பீர்களாயின், சொல்லுகிறேன் கேளுங்கள். நமது நாட்டிலே தற்காலத்தில் உயர்ந்த கல்வி என்று கருதப்படும், ஆங்கிலக் கல்வி கற்றுத் தேர்ந்தவர்களில் பெரும்பாலோர காசுக்குதவாத பண்டங்களாக யிருக்கிறார்கள். காணக்கிடையாத தங்கங்களாயிருப்பார் களென்று எண்ணித தாய்தந்தையர் பட்டினி கிடந்து படிக்க வைத்த பிள்ளைகளெல்லாம் காசுக்குதவாத பண்டங்களாய்ப் போனார்கள். இவர்களில் எத்தனையோ பேர் பி. ஏ. பட்டம் பெற்றவர்களா யிருக்கிறார்கள். அதனால் என்ன பயன்? இவர்களுக்குச் சிறிதேனும் உலக அறிவு இல்லை; அனுபவமுங் கிடையாது. புத்தகப்படிப்பு என்னத்திற்குதவும்? "அதிகப்படிப்பு உடலுக்குச் சலிப்பு"

---

* இக்கட்டுரை 1927-ஆம் ஆண்டில் திருச்சிராப்பள்ளியில் ஒரு தமிழ்ப் பல்கலைக்கழகம நிறுவககருதியகாலை எழுதப்பட்டது.

என்றார் ஒருவர். அதிகப் படிப்பினால் சலிப்பு மாத்திரமன்றி, வலிப்பு வருவதுமுண்டு. இந்த வலிப்பு எப்படிப்பட்டதென்பதை இப்பொழுது சொல்ல வேண்டியதில்லை. பி. ஏ. படித்தவர் பலர் பிழைப்பில்லாமல் திண்டாடுகிறார்கள். "பி ஏ. என்ற எழுத்துக்களுக்கு என்ன அர்த்தம்?" என்று ஒருவர் என்னைக் கேட்டார். "பி.ஏ. என்றால், பிழைக்க ஏலாதவன்" என்று நான் பதிலுரைத்தேன். நான் சொன்னது சரி என்று என்னைக் கேட்டவர் ஒப்புக்கொண்டார்.

இப்பொழுது சிறிது நாளாய்த் தமிழ்ப் பல்கலைக் கழகமொன்று திருச்சிராப்பள்ளியில் நிறுவ வேண்டுமென்று பேச்சு நடந்து வருகிறது. பல கலைகள் கறபிக்கும் ஒரு பள்ளியைத் திருச்சிராப்பள்ளியில் நிறுவுவது மிகுந்த பொருத்தமாய்த்தான் தோன்றுகிறது. ஆனால், எந்தப் பல்கலைக் கழகமா யிருந்தாலும், பிழைக்க ஏலாத பேர்வழிகளை உண்டாக்குவதா யிருந்தால், அந்தப் பல்கலைக்கழகம் நமக்கு வேண்டாம். பிழை நிறைந்த கல்வி கற்று மக்கள் பிழைக்க வழியில்லாமல் தவிக்கின்றார்கள். இவர்களில் பலருக்குக் கலப்பை என்றால் என்ன, கவலை என்றால் என்ன என்பதே தெரியாது. கலப்பை என்றால், " அஃது என்ன பை ? " என்று கேட்கிறார்கள். மனக்கவலை யன்றி வேறு கவலை அவர்களுக்குத் தெரியாது. இப்பேர்பட்ட மக்களின் நிலைமையைக் கண்டு இரங்கி, 'அரஞ்செய இரும்பு' என்னும் புத்தகத்தை எழுதியிருக்கிறேன்.

நம்முடைய நாடு இப்பொழுது இருக்கும் நிலையில் தொழிற்கல்விதான் முக்கியமாய்வேண்டும் என்று எல்லோரும் அபிப்பிராயப்படுகிறார்கள். ஆகையால் அரம் முதலிய ஆயுதங்களைக் குறைவின்றிச் செய்வதற்கு எந்த விதமான இரும்பு வேண்டும். அந்த இரும்பை எப்படிப் பக்குவப்

படுத்த வேண்டும் என்பதைப்பற்றி எல்லாம் ‘ அரஞ் செய இரும்பு ’ என்னும் புத்தகத்தில் விசித்திரமாகவும் விளக்க மாகவும் கூறியிருக்கிறேன் ஆயுதங்கள் செய்யக் கற்றுக் கொள்வது நம்முடைய முதற் கடமை. ஆயுதங்களில் ‘ அரம் ’ என்பது செய்யக்கற்றுக்கொள்வதற்கு அவ்வளவு கஷ்டமானதன்று. அரம் என்ருல் அறுக்குங் கருவி என்று பொருள் ; அரன என்று சிவபெருமானுக்குப் பெயர் இருப்பது எதுபற்றி என்று தெரியுமா ? அடியாருடைய பாவங்களை அறுப்பவன் என்ற பொருள் பற்றி. அரி என்ற பெயருக்கும் அதுவே பொருள். ஆகையால் அரம் என்ற ஆயுதம் பாற்கடலில் பள்ளிக்கொள்ளும் பரந்தாமனேடும், கைலைமலையாளியாகிய பரமசிவனேடும் ஒன்ருக வைத்துப் பேசக்கூடிய பெருமையை யுடையது. அரஞ்செய்யக் கற்றுக்கொண்டால், நம்முடைய பிழைகள், குற்றங்கள், தவறுகள் எல்லாம் அறுந்துபோகும் ஆகை யால் ஆத்திசூடியில், ‘ அறஞ்செய விரும்பு ’ என்ற வாக்கி யம் எப்படி முதலில் இருக்கிறதோ, அப்படியே ‘ அரஞ் செய இரும்பு ’ என்ற என்னுடைய புத்தகம் எல்லாப் புதத கங்களிலும் முதலாயிருக்கிறது. இதில் இரும்பை உருக்கு வதைப்பற்றி வெகு உருக்கமாகவும், இரும்புக்குச்சுருகதுக் கொடுப்பதைப்பற்றிச் சுருக்கமாகவும், இரும்பைக் காய்ச்சு வதைப்பற்றிப் பேசும்போது படிப்போருடைய மனம் கொழுந்துவிட்டு எரியும்படியாகவும் எழுதியிருக்கிறேன் இதைப் படிப்பவர்களுடைய தலை இரும்பாகிவிடும் என்று கூடப் பயப்படும்படியான அவ்வளவு சங்கதிகள் இருக் கின்றன. இரும்பைப்பற்றிப் பல நூல்களில் சொல்லியிருக் கிறதை எல்லாம் ஒன்ருய்த் திரட்டிச் சம்மட்டி கொண்டு அடித்து விரித்ததுபோல் விரித்திருக்கிறேன். இன்னும்

விரிக்க இடம் போதாது. ஆசிரியனாகிய நானே இந்தப் புத்தகத்தின் பெருமையைப் பற்றிப் பேசுவது நன்றாயில்லை அதிகமாய்ப் பேச என் மனம் நாணுகிறது. எனக்கு எவ்வளவு நாணய மிருக்கிறதோ அவ்வளவு நாணமும் உண்டு. ஆனால் ஒருவன் எப்போப்பட்ட இருப்புத் தலையனானாலும் நான் எழுதிய புத்தகத்தைப் படித்துக் கொஞ்சம் கையிருப்புத் தேடிக்கொள்ளலாம். இரும்பு இல்லாமல் இருப்பு வராது. வெள்ளைக்காரருடன் நமக்குச் சரி இருப்பு வேண்டுமானால், இரும்பு வேலையை உடனே தொடங்கவேண்டும். இதை யறியாமல், சுயராச்சியக் கட்சிக்காரர், சுயேச்சைக் கட்சிக்காரர், சஸ்டிஸ் கட்சிக் காரர் ஆகிய எல்லோரும் சட்ட சபையில் இருப்பைத் தேடிக்கொண்டார்கள். சட்ட சபையில் இருப்புக் கிடைத்துவிட்டால் குடியிருப்பு உயர்ந்துவிடுமோ? ஒருகாலும் இல்லை.

நாடு செழித்து, நகரங்கள் தழைத்து, மக்கள் பிழைக்க வேண்டுமானால் சும்மா படிப்பதை விட்டு இரும்படிப் பதைத் தொடங்கவேண்டும்.



# 7. மொழிகள் வெளியிடு முண்மை

## 1. பிழைத்தலும் இறத்தலும்

இவ்விரு சொற்களுங் குறிக்குந் தொழிலைப்பற்றி நமது முன்னோர் கருதது இவையெனத் துணிய முயல்வதே இச் சிறறுரையின் நோக்கம். இச்சொற்களில் எளிதாய் யாவருங் காணும் பொருளைத் தவிர்த்துக் காணக்கிடப்பது வேறொன்றுண்டோ வென்று ஐயுறுவார்க்கு எடுத்துக் காட்டாகச் சிறுமொழி யொன்றின் குறிப்பை முதலில் விளக்கி மேறசெல்வது பொருந்தும். 'தூக்கு' என்ற பலரறியுஞ்சொல்லிற்குச் செய்யுள், கூத்து, நூறுபலம், ஆராய்தல் என்றிவை போன்ற பொருள்கள் பலவுள. இப்படி ஒரு சொல் பல பொருள் கொண்டு வருவது பொருத்தம் பற்றியோ அல்லது பொருத்த மின்றியோ வென்பது கேள்வி. இதை ஆராய்வாம். 'தூங்கு' என் பதன் பிறவினையாகிய 'தூக்கு' என்ற சொல்லிற்கு 'உயர்த்து' என்பது முதற் பொருள் அது பின் பெயராய் நின்று 'உயர்ச்சி' என்ற பொருளைத் தரும். (சுருங்கு சுருக்கு, விளங்கு விளக்கு, முழங்கு முழக்கு என்பவற றோடு ஒப்பிடுக.) 'உயர்ச்சி' என்ற கருத்திலிருந்து மேற் குறித்த பொருள்கள் யாவும் தோன்றும் :—

க. தூக்கு-நூறுபலம் ; அஃதாவது ஒரு நிறை. ஒன் றின்நிறை இதுவெனக் காணவேண்டுமாயின் அது மண்ணி லிருந்து மேலே தூக்கப்படும். மண்ணி லிருக்கும் வரையில் அதன் எடைவிளங்காது (எடை — இது 'எடு' என்ற முத னிலை யடியாகப் பிறந்தது. எடுத்தலளவை — இதில் 'எடு' என்பதை நோக்குக )

உ. தூக்கு-செய்யுள் ; அஃதாவது இயல்பாய் நாம் பேசும் பேச்சிலிருந்து உயர்த்தப்பட்டு விளங்குவது; மேம்

-பட்டது. மேல் நாட்டார் ஆராய்ச்சிக்கு இஃது ஒற்றுமை யுடையது.

௩. தூக்கு-கூத்து. கால் தூக்கியாடிய அம்பலக் கூத்து; கழையின் நுனியில் நின்றாடுங் கழைக்கூத்து முதலியவற்றா லுணர்ந்து கொள்க.

௪. தூக்கு-ஆராய்தல்: இது முன் பொருளிலிருந்து இயற்கையாய்ப் பிறப்பது. நிறுத்துப் பார்த்தலிலிருந்து ஏற்றத் தாழ்ச்சியை உற்றுநோக்கும் 'ஆராய்ச்சி' என்ற பொருள் தோன்றுவது வியப்பன்று.

'கொலையாளி தூக்குண்டான்,' என்பதில் பொருள் வெளிப்படை ஆனல் தூக்கம்-உறக்கம், என்பதின் குறிப்பு யாது? ஆழ்ந்த உறக்கம், சாவைப் போன்றது. அஃது உயிர்த்தலு மன்று; சாதலு மன்று; விசும்பிற்கும் மண்ணிற்குமிடையே மரக்கிளை யொன்றில் அல்லல் படுபவன் தொங்குகிறான்; (தொங்கு, தூங்கு என்பன ஒன்றே) உயிருக்குஞ் சாவிற்கு மிடையிலுள்ள நிலையி லிருப்பவன் தூங்குகிறான்.

இதுவரையில் நாம் கூறியது உண்மையாயின், பிழைத்தல், இறத்தல் முதலிய சொற்களில் மறைந்து நிற்கும் பொருளிருக்கலாமென்று எண்ண விடமுண்டு.

பிழைத்தல்: இதொழிற்பெயர் தப்பித்துக்கொள்ளல், தப்பிதஞ்செய்தல் என்ற இயைபுடைய இரண்டு பொருள் களுடன், உயிர்வாழ்தலையுங் குறிக்கும். உயிர்வாழ்தலுக்குந் தப்பித்துக்கொள்ளலுக்கும் ஏதாயினும் ஒற்றுமையுண்டோ வென்ற வினா இதனால் பிறக்கிறது. இதுவே இங்கு நாம் தூக்கவேண்டியது. மிகக் கொடிய பிணிவாய்ப்பட்டா னொருவன் அதிலிருந்து மீள்வானாயின், "அவன் பிழைத்துக் கொண்டான்" என்று மக்கள் கூறுவதை எப்போதுங்

கேட்கிரேம். இது வழக்கமாய் யாவரும் பேசும் பேச்சானமையின் இடத்திற்கேற்ற மொழி இடரின்றி அமைந்து நிற்கிறது. ஆனல் பொருள் தெளிவாய்த் தோன்றவில்லை. "பிழைத்துக் கொண்டான்" என்றல் தப்பித்துக் கொண்டான் என்பதுவே கருத்து. "நிலத்தறைந்தான் கை பிழையாதற்று" "பிழையா விளையுள்" என வருதல் காண்க. ஆனல் 'பிழைப்பு,' 'பிழைத்தல்' என்ற சொற்களை நாம் ஆளும்போது, வாழ்தல் என்ற எண்ணமொன்றே நமக்குளது. இது பழக்கத்தின் பயன். பாரிற் பிறந்து வாழுமுயிர்களுக்கு நேரிடும் இன்னல்களுக்கும் இடையூறுகளுக்குங் கணக்கில்லை; அவற்றை யழிக்கக் காத்திருக்கும் வல்வினைகளுக்கு அளவேயில்லை பகை, பசி, பிணி முதலியவற்றிற்கு நாடோறும் அவை இரையாய்ப் போகின்றன. இவற்றிற்கு எஞ்சி நிற்பவையே வாழ்வன; இவற்றிற்குத் தப்புவதே பிழைப்பு. மேனுட்டு மக்களியற்றிவரும் உயிர் நூல்களில், மரம் பறவை விலங்கு மக்களெல்லாந் தங்களை அழிக்க வகை தேடும் இயற்கை யமைப்போடு போரிட்டுத் தம்மைத தாம் காப்பாற்றிக் கொள்கின்றன வென்ற கொள்கை பெருகிக் கிடக்கும். அன்றியும் இவையே ஒன்றை ஒன்று கொல்லும்; ஆதலால் எப்பொழுதும் உயிர் வாழ்வனவெல்லாம் போரிட வேண்டியதா யிருக்கிறது. இதை உற்றுநோக்குங்கால் மக்களும் விலங்குகளும் ஒருங்கே வேருடன் அழிந்தொழியாது மிகுந்திருத்தல் பெரிய இறும்பூதாகின்ற தென்று மேல்நாட்டுப் புலவர் வெளியிடுகின்றனர். சாதலே எல்லாவற்றிற்கும் பொது; உயிருடனிருப்பது விலக்கு (Death is the rule; life is exception). இஃது உயிர் நூற் றுணிபு. ஆதலின் சாவினின்றுந் தவறிநிற்றலே வாழ்க்கையாகும்; மாண்டொழியாது தப்புதலே உயிருடனிருத்தல். தவறு, தப்பு, பிழை

என்பன ஒருபொருட் பன்மொழி. இதை நன்குணர்ந்த பண்டைத் தமிழர் உயிர்வாழ்தலைப் பிழைத்தலென்று மொழிந்தனர். அவரறிவை வியந்து போற்றுதும்.

இறத்தல் : இச்சொல்லுக்குரிய பல பொருள்களின் தொடரைவை இங்கு நாம் விரிக்கப் போவதில்லை. ஒன்றை மாத்திரமே கருதுவோம். இறத்தல் என்பது கடத்தல்.

" இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு."

இக்குறளில் 'இறந்த' என்பதின் பொருளை நோக்குக. 'இறந்த காலம்' என்பதிலும் அதுவே பொருள். வீட்டுக் கூரையி லொரு பகுதியை 'இறப்பு' என்று சொல்வதுண்டு. இறப்பென்றால் இழுவன்று. கூரையில் சுவரைக் கடந்து நிற்கும் பகுதிக்கு அது பெயர்.

" இறையுயர் மாட மெங்கணும் போர்த்து "

(சிலப்பதிகாரம், நாடுகாண் காதை. வரி-௧௩௫.)

இவண், இறை - இறப்பு என்று அருஞ்சொல்லுரையில் கண்டிருப்பது கருதத்தக்கது. அடியார்க்குநல்லார் அதை ஏனோ விளக்கவில்லை. இனி, இறை என்றால் கடவுள் என்றொரு பொருளுமுண்டு ; கடவுள் - கடந்து நிற்பவன் அல்லது கடத்தல். இற-கட, இறை-கடந்தவன், (புதிதாய்ப் பிறக்கும் நிலா பிறை எனப்படுவதுபோ லென்க.)

மேற்கூறியவற்றால் இறை, இறப்பு, பிறத்தல், இத்தொடக்கத்தன வெல்லாங் கடத்தலாகிய தொழிலைக் காட்டுவது பெறும். உடலை விட்டு உயிர் நீங்கும் நிகழ்ச்சியைப் பற்றித் தமிழருக்கிருந்த எண்ணம் இதனாற் புலப்படும். பிற மக்களைப்போல் அவர்கள் அதை நினைந்து திடுக்கிட்டு நடுக்கந் தரும் பெயர்களை அதற்கிடவில்லை.

அதை வாழ்க்கையி னிறுதியென அவர் துணியவில்லை. முன் ஆராய்ச்சியில் மாள்தல் பொதுவாதலும் வாழ்தல் சிறப்பாதலுந் தமிழ் மக்களுக்குத தொடக்கத்திலேயே தெரிந்த உண்மை யென்பதைக் கண்டோம். அதற் கிசையவே யாவற்றிற்கும் உறைவிடமாகிய முதல்வனிடத் திற்கு உயிர்கள் கடந்து போதலே சாதல் எனக் காட்டுவான் இறந்த லென்றதை விளம்பினர். மற்றும் இறை: உயர்ச்சி, பெருமை, வேந்தன் என்பவற்றையுங் குறிக்குமாற்றால், உயிர்துறத்தல் ஒரு வகையில் மேன்மை யடைதலென்றுங் கருதப்பட்ட தென்பது விளங்கும். இதற்கு வேறு சான்று முண்டு. 'மாண்டார்' என்ற வினையாலணையும் பெயர் இறந்தோரையே பெரும்பாலுங் குறிக்கும். ஆனால் 'மாண்டார் நீராடி மறைந்தொழுகு மாந்தர்' என்ற திருக்குறள் மொழியில் அதற்கு மாட்சிமை யுடையவர் எனப் பொருள் காணவேண்டி யிருத்தலின், 'மாள்' என்ற அடியாகப் பிறக்கும் மாட்சி, மாண்பு முதலியவற்றுடன் மாளுதலையுஞ் சோததுணர்தலே தகுதி.

பிழையறப் பிழைத்து மாண்புடன் மாண்ட தமிழ் மக்கள் திறம் வியந்து வாழ்த்துதும்.

## 2. வகுத்தல்

வகுத்தல் என்பது பிரித்தல் என்று பொருள்படுவதால் 'பகுததல்' என்னுஞ் சொல்லுடன் நெருங்கிய கேண்மை யுடையது. வகுத்தலும் பகுத்தலும் வகு, பகு, என்னும் அடிகளாற் பிறப்பன; இவ்வடிக ளிரண்டும் ஒன்றே என்று கருத இடமுண்டு. பகர வகரங்கள் உதட்டிற் பிறக்கும் ஓசைகளானமையின், ஒன்று மற்றொன்றாய்த் திரியும். ஆங்கிலத்தில் Scribe, Script, Scrive, Scrivener எனுஞ்

சொற்களில் பகர வகரங்கள் திரிந்து வருதல் காண்க. வண்டி எனுந் தமிழ்மொழி தெலுங்கில் பண்டி என்றும், ஆங்கிலத்தில் Bandy என்றும் வருவது உணரத்தக்கது. பகர வகரங்களே யன்றி மகரமும் இதழிற் பிறக்குமாதலின், இம் மூன்றும் விரவி வருவது முண்டு. செம்மை, செவ்வை, செப்பம் முதலியவற்றையும், கும்பல், குப்பல், குவியல் என வருபவற்றையும் சேர்த்தறிய இது நன்கு புலப்படும். ஆதலால், பகு, வகு எனுமிவற்றுள் எது முந்தியது என்று ஐயமறக் கூற இயலாதேனும், அவை யிரண்டு மொன்றே என்பது வெளிப்படை. தமிழ்ச் சொற்களின் தன்மையை நன்காராய்ந்து அவற்றை வகைப்படுத்திக் காட்டும் நூல்கள் ஒன்றிரண்டு இப்பொழுதுதான் தலைகாட்டுகின்றன. ஓரடியாற் பிறக்குஞ் சொற்களை ஒன்ருய்த் திரட்டிக் கொடுக்கும் நூல்கள் இருந்தாலன்றிச் சொல்லாராய்ச்சி பெருகாது.

பகு என்னும் முதனிலையிலிருந்து பகிர், பகிர்தல் என்ற சொற்கள் தோன்றும் வண்ணம் வகு என்பதிலிருந்து வகிர், வகிர்தல் என்ற மொழிகள் பிறக்கும்; வகிர் = பிளவு, வழி. வகிர்தல் = பிளத்தல்; அன்றியும் வகுதி என்ருெரு சொல்லுமுண்டு.

இது பகுதி என்பதைப்போல் 'தி' ஈறுபெற்று வருமொரு பெயர்; பகுதி = பகுப்பு, வகுதி = வகுப்பு. தொகுதி, தகுதி, மிகுதி என வருவனவும் இத்தகையவே. இனி, பகுதி என்பது 'பாதி' என்று நின்று அதற்குமேல் பாதித்தல்-கூறு செய்தல் என வருமாறு, வகுதி என்பது 'வாதி' என நின்று அதன்மேல் 'வாதித்தல்' என்றும் வரலாம்; வாதித்தல்-பேசுதல், வருத்தப்படுத்துதல். அங்ஙனமாயின் 'வாதை' என்பதும் மேற்கூறியவற்றுடன் ஒற்றுமையுடையதாகும். வகிர் என்ற சொல்லிற்கு 'வழி' என்ற பொருளும், வாதித்தல் என்பதற்குப் பேசுதல் என்ற பொருளும்

பொருந்துமோவெனின், சொல்லுதும்: அறு என்னும் முதனிலையின் பொருள் 'பிரி' என்பது. இது 'ஆறு' என்று நின்று 'வழி' என்று பொருள் தரும். ஆறு - அறுக்கப் பட்டது. அங்ஙனமே வகிர் – வகுக்கப்பட்டது. மேலும் அறு என்னும் அடியாக 'அறை' என்ற மொழி பிறக்கும்; இதற்குச் 'சொல்' என்ற பொருளுண்டு: அறைந்தான் - சொன்னான். ஆதலின், வாதித்தல் - பேசுதல். வகுத்தல் என்ற தொழிற் பெயரும் பேசுதல் என்னுங் குறிப்பில் வரும். இது கூறுதல் என்பதை யொத்தது; கூறுதல் - சொல்லல்; கூறு - பிரிவு இஃதன்றி 'வகுந்து' என்றோர் அருஞ்சொல்லுமுளது

"வகுந்து செல்வருத்தத்து வான்றுயர் நீங்க,"

(சிலப்பதிகாரம். அடைக்கலக் காதை. வரி-௩௭.)

"வரைசேர் வகுந்திற் கானத்துப் படினே"

(மலைபடுகடாம், வரி-௨௪௨.)

இவற்றில் வகுந்து எனுஞ் சொல் 'வழி' என்ற பொருளுடன் வந்தது. இதை ஆராய்ந்து அமைத்துக் கொள்க.

நிற்க, 'வகை' எனும் பெயர்ச்சொல் 'வகு' என்ற அடியாற் பிறந்து, இனம், கூறுபாடு, பகுப்பு, முறை, வழி என்று நெருங்கிய ஒற்றுமையுடைய பல பொருள்களைத் தரும். இதனின்றும் வகைப்படுதல், வகைப்படுத்தல் என்ற தொழிற் பெயர்களும் பிறக்கும். வகைப்படுதல் - பிரித்தல், பங்கிடுதல். அன்றியும், வகை என்பது தொகை என்பதற்கு எதிர்மொழி யாதலால் அது தமிழ்ச்சொல் என்பதை எவரும் மறுக்கத் துணியார். பகை, மிகை, தகை, நகை முதலியன பகு, மிகு, தகு, நகு எனும் முன்னிலைகளி

னின்றுந் தோன்றுவது காண்க. ஆனல், மேல்நாட்டுச் சொல்லாராய்ச்சி வல்லார் தமிழின் தொன்மையையும் இனிமையையும் வகுத்துணரப் பொழுதும் உளமும் இலராய் இந்நாட்டு மொழிகளில் வட மொழி யொன்றையே பகுத்துப் பார்த்துத் தமது மொழிகளின் தோற்றம், வளர்ச்சி, திரிபு முதலியன கூறியுள்ளார் :—

| | |
|---|---|
| வழி என்பதற்கு ஆங்கிலமொழி ... | Way |
| இதற்குப் பழைய ஆங்கிலம் (Old English) | Weg |
| பழைய ஜெரமன் மொழி (Primitive German) | Weg |
| காத்திக் மொழி (Gothic) | Wig (s) |
| பழைய ஐசுலாந்து மொழி (Old Icelandic) | Veg (v) |
| லதின் (Latin) | Via |

இவற்றை மேல்நாட்டுப் புலவர்கள் வடமொழியி லுள்ள 'வகா' (Sanskrit Vaha) என்பதுடன் புணர்த்து கிறார்கள். ஆதலின் 'வகா' என்ற வடமொழியிலிருந்து 'வகை' என்ற தமிழ் மொழி வந்ததோ அல்லது வகை என்ற தமிழ்மொழி 'வகா' என்ற வடசொல்லாய் நின்றதோ வென்பது ஆராய்தற் குரியது.

## 3. பழமை

பழமை என்பது தொன்மை; தொன்மை எனுஞ் சொல் 'தொன்று' என வருதலை 'தொன்றுதொட்டு' என்ற சொற்றொடரிற் காணலாம். இங்ஙனமே பழமை என்பது 'பண்டு' என வரும். 'பண்டு' என்பதற்குத் தெலுங்கில் 'பழம்' என்று பொருள். 'பழுக்கவில்லை' என்பதைத் தெலுங்கர் 'பண்டலேது' என்பர். இதனல் பழமை, பண்டு, பழம் என்ற முச்சொறகளுந் தொடாபுடை யன வென்பது புலனுகிறது. பழம் என்ற கிளவி 'பழு'

என்ற முளையால் தோன்றுவதாகலின், 'பண்டு' என்பதி லும் 'பழு' என்பதே முளையாகுமெனல் பொருந்தும். இஃது எங்ஙனமாகு மென்பதைக் காண்பாம். ழகரத்தை வாயிற் கூட்டுவது எவருக்குஞ் சிறிது அரிது இதனல் கல்லார் பலவாறு அதைத் திரித்து வழங்குவர். தமிழ் நாட்டின் தென்பகுதியில் அது ளகரமாகும்; வடபாதியில் யகரமாகும். மேல்நாட்டார் அவ்வெழுத்தை அமைக்க முயல்வது நகைச் சுவைக்கு இடந்தரும். தெலுங்கில் ழகரம் டகரமாய் மாறும், சிறுபான்மை வேறு எழுத்துக் களாய்த் திரிவது முண்டு. கோழி, ஏழு, இழு, கழுவு என்ற தமிழ்மொழிகள் முறையே, கோடி, ஏடு, ஈடு, கடுகு என வருதல் காண்க. இவ்வாறு 'பழு' என்பது 'படு' என நின்று, பின் டகரத்திற்கு இனமாகிய ணகரத்தை இடையில் ஒற்ருய்ப் பெறறு, 'பண்டு' என்ருகியிருக்க வேண்டும். இதற்குப் பிற சான்று முண்டு. 'படுத்துக் கொள்' என்பதைத் தெலுங்கில் 'பண்டுகோ' என்பர். இதில் 'படு' என்பது 'பண்டு' என நிற்றல் கருதத்தக்கது. அன்றியும், கூடு, பூடு என்ற தமிழ்மொழிகள் இடையில் ணகரத்தைப் பெற்றுக் கூண்டு, பூண்டு, என வருதலும் இவ் வாராய்ச்சிக்கு இயைபுடையதே.

பழுத்தல்=முற்றல். பழமை=முற்றியதன்மை பண்டு =முற்றிய அல்லது இறந்த பொழுது. பழு என்பது இறந்த காலத்தைக்காட்டுமென்பதைப் பழுமரம், தொன்மரம் என் பன ஒருபொருளனவாய் ஆலமரத்தைக் குறிப்பதா லறிக. ஒருநாள் அட்ட உணவு மறுநாளிருந்தால் அதைப் 'பழயது' என்று நாம் சொல்வதும் மேற்குறித்ததையே வற்புறுத்தும். பழம்=முற்றியது, நிறைவடைந்தது. தமிழ் ழகரம் நாக்கில் வாராமையால் 'பழம்' என்பதைப் 'பலம்' என்பாரு முளர்

நிற்க, பழமொழி என்பதை முன்னுள் மொழி என்ருவது, முதிர்ந்து நிறைந்த மொழி என்ருவது பொருள் படுததலாம்; இரண்டுங் கூடியே பொதுவாகப் பழமொழிகள் ஏற்படும். வீட்டில் ஆடுகின்ற (சொக்கட்டான்) ஆட்டங்களில் 'பழம் பழுத்தல்' என்பது ஆட்டம் நிறைவு பெறுதலைக் காட்டும். ஏதாவது ஒன்று முடிந்ததோ இல்லையோ என்பதை வழக்கத்தில் காயா? பழமா? என்று கேட்கிறோம் பழுக்கா அல்லது பழுக்கை என்பது பொன்னிறத்திற்கு ஒரு பெயர். இந் நிறம் பழுத்தலாகிய நிகழ்ச்சியா லாவது கண்டு அப் பெயர் பெற்றது போலும். பழுப்பு என்ற சொல்லும் இத்தகையதே மஞ்சள் நிறத்தைத் தெலுங்கர் 'பசப்பு' என்று சொல்வர். இது பழுப்பு என்பதுடன் ஒற்றுமை யுடையதே. 'மேனி பசத்தல்' என்பதை ஒப்பிடுக.

பழகல் = அறிமுகம். முதிர்தல், பயிலல். முதிர்ந்து நிலைபெற்ற நட்பை நிறைமொழி வள்ளலாகிய வள்ளுவர் 'பழமை' என்று இனிதாய்ச் சொல்வர். பழக்கம் = இணக்கம். தென்னுட்டு மக்கள், பழக்கம் என்பதை ஓர் அரிய பொருளில் வழங்குகிருர்கள். "நான் நேற்று அவனுடன் பழக்கமிட்டுக் கொண்டிருந்தேன்" என்று பேசுவதைத் திருநெல்வேலியில் பலவிடங்களில் பெரும் பான்மையுங் கேட்கலாம். பழக்கமிடுதல் = பேசுதல். பாட்டுக்களா லமைந்த நந்தனர் வரலாற்றின்கண் ஒரு நொண்டிச்சிந்தில் "சேரியில், வழக்கமில்லாதபடி பழக்க மிட்டான்" என்று வருகிறது. இப்பொருள் மிகவும் அருமையானது. ஏனெனில், பேச்சென்பது பழக்கத்தினு லாகிய ஒன்றே என்ற உண்மையைத தமிழர் தொன்று தொட்டு அறிநதவர்கள் என்று இதனுல் அறியலாகிறது. இது நன்கு ஆராய்தற்குரியது.

## 4. தொலை

இது தொன்மை, தொன்று இவற்றுடன் ஒற்றுமை யுடையதாகிச் சேய்மை என்னும் பொருளில் வரும். கலை, விலை, நிலை என்பன கல், வில், நில் என்ற முன்னிலைகளாற் பிறக்குமாறு, தொலை என்பதும் தொல் எனும் முளையி னின்றுந் தோன்றுவது. 'தொல்வரவு' 'தொல்வினை' 'தொல்காப்பியம்' இவற்றை நோக்குக. "தொலிநே ஜேசின பூஜா பலமோ" என வரும் தியாகராசர் பாடலில், தொலி என்பது பழமை தமிழில் தொலி என்ற சொல் உமி அல்லது தோலைக் குறிக்கும். இவற்றிற்குரிய தொடர்பு விளங்கவில்லை. தொலித்தல் = உமி போக்கல், தோலுரித்தல். தொலித்தல் என்பது தெலுங்கில் ஒழித்தல் என வருமென்று திரு. காரத்திகேய முதலியார் தமது மொழிநூலில் குறித்துளார். தொல்லை எனுஞ் சொல் பழமையைக் காட்டுவதுடன் தொந்தரவு என்ற பொருளை யுந் தரும்; இவ்விரண்டு பொருள்களுக்கு முள்ள பொருத் தமும் தெளிவாய்த் தெரியவில்லை.

தொலைதல் = ஒழிதல், கெடுதல், சாதல், நீங்குதல்; தொலை = சேய்மை; தொலைதல் = சேய்மைப்படுதல்; அஃதா வது நீங்குதல். நம்மால் வெறுக்கப்படும் ஒருவன் நம்மை விட்டு நீங்குவானாயின் 'அவன் தொலைந்தான்' என்று சொல்வது வழக்கம் ஒரு பொருள் 'தொலைந்தது' என்று சொல்லும்போது அப்பொருள் அண்மை நீங்கிச் சேய்மை யடைந்தது என்பதுதான் கருத்து. இது மற்றொரு வகை யானும் உணரப்படும். 'பொற்கிண்ணம் எங்கேயிருக்கிறது?' என்ற கேள்விக்கு அதை வைத்திருக்கும் மகன், 'அஃது என்னண்டை யிருக்கிறது' என்று விடையளிக்கிறான். இங்கு 'அண்டை' என்பது 'தொலை' என்பதுடன் முரண்

பட்டு நிற்பதை நோக்குக. 'அஃது என்னிடத் துளது;' 'அஃது என்கிட்ட இருக்கிறது' என்ற சொற்களிலும் முற்குறித்த கருத்தே விளங்குதல் காண்க. அன்றியும் தொலைந்த ஒன்று கைக்கு வருமாயின் 'அது கிட்டிற்று' அல்லது 'அது கிடைத்தது' என்று நாம் பேசுவதும் மேலே சொன்னதை வற்புறுத்தும். 'நான' என்பதற்கும் வைய கத்திலுள்ள பொருள்களுக்குமுள்ள தொடர்பைத் தமிழர் எங்ஙனம் உணர்ந்தார் என்பதை இதனால் ஒருவாறு அறிய லாம். 'கடுக்கன் தொலைந்து போயிற்று' என்பதிலுள்ள கருததை வேறுவகையாய்ச் சொல்லவேண்டுமானால், 'கடுக் கன் காணுமற் போயிற்று' என்றுதான் கூறல்வேண்டும். கடுக்கன் இல்லாமற் போகவில்லை; அது பார்வையிலில்லை; அல்லது கண்ணிற்கு மறைந்தது என்று சொல்வது தேர்ந்து தெளிந்தவரது கூற்ருகும். "காணுமற் போட்டுவிட்டேன்" என்பதிலுள்ள பொருளை வடமொழியில் "தாரைவார்த்து விட்டேன்" என்று சொல்லும்பொழுது எவ்வளவு பொருள் வேற்றுமை யுண்டாகிவிடுகிற தென்பதை அறிஞர்கள் காண்பாராக. நம்மிற் பலர் தமிழ்ச் சொற்றொடர்களின் அழகையும், ஆழ்ந்த கருத்தையும் ஊன்றிப் பாராதது வருந்தத் தக்கதே.

## 5. நன்மை

மென்மை, வன்மை முதலிய பண்புப்பெயர்கள், மெல், வல் எனும் அடிகளாற் பிறக்குமாறே, நன்மையும் 'நல்' எனும் முன்னிலையினின்று பிறப்பது 'நன்மை' என்பது இன்னதென இங்கு ஆராய்வோம்; தொன்ளுளில் தமிழர் இச்சொல்லை என்ன பொருளில் வழங்கினர்களென்பதைக் காணவேண்டுமாயின் தொன்றுதொட்டு வருஞ் சில சொற் றொடர்களை உற்று நோககவேண்டும். 'எண்ணெய்'

என்பது முதலில் எள்ளின் நெய்யைக் குறித்தது. நாளா வட்டத்தில் இப்பெயர் வேம்பு, ஆமணக்கு முதலியவற்றின் கொட்டையினின்று எடுக்கப்படும் நெய்களுக்கும் பெயராயிற்று.

வேம்பினின்று ஆக்கப்படும் நெய் வேப்பநெய் எனப் படாது வேப்பெண்ணெய் எனப் பெயரிடப்பட்டது. ஆமணக்கு நெய் விளக்கெண்ணெய் எனப்பட்டது. இங்ஙனம் எண்ணெய் எனுஞ் சொல் தன் முதற்பொருளை இழந்து வேறுபொருளில் வழங்கத் தொடங்கினதால், அம் முதற் பொருளைக் குறிப்பதற்கு வேறுசொல் வேண்டியதாயிற்று. ஆதலின் நல்லெண்ணெய் எனுஞ் சொற்றொடர் தோன்றிற்று. நல்லெண்ணெய் — சரியான எள்நெய். இவ்வாறே பாம்பு எனும் மொழி முதலில் தலை விரித்தாடும் பாம்பையே காட்டிற்று. சாரை, கொம்பேறி முதலியவையும் பாம்பெனப்பட்டமையால், தலைவிரித்தாடும் பாம்பு 'நல்ல பாம்பு' எனப் பெயர் பெற்றது. நல்ல பாம்பு— சரியான பாம்பு. அன்றியும், உழுது பயிரிடப்படும் நிலம் இருவகைப்படும்: ஒன்று நெற்பயிர் விளையும் நிலம்; மற்றொன்று புல்லு (கம்பு), கொள்ளு, வரகு முதலியன விளையும் நிலம் முந்தியது நன்செய் என்றும், பிந்தியது புன்செய் என்றும் பெயர் பெறும். நன்செய் என்பது புன்செய் என்பதற்கு எதிர்மறையாயின், அது நாம் முற்காட்டிய பொருளையே தருவது காண்க.

பின்வரும் பேச்சை நோக்குக:—

ஒருவன் "உன்னுடைய செய்கையை நான் மிகவும் வெறுக்கிறேன்."

மற்றவன் "நல்லது; என்னை என்ன செய்யச் சொல்லுகிறாய்?"

இதில் 'நல்லது' என்பவன் பொருளென்ன? 'சரி' என்று பொருள் கொள்ளாவிடின் வேறு எப்பொருள் இவ்விடத்திற் பொருந்தும்? 'பெண் நன்மையடைந்தாள்,' 'பெண் நன்மையாளுள்' என்று வருஞ் சொற்றொடர்களில் நன்மை எனுங் கிளவி திரட்சியைக் காட்டும். திரட்சி என்பது ஒரு நிலை; அது சரியான நிலை யாதலின் நன்மை எனப்பட்டது. 'நல்ல தண்ணீர்,' 'நல்ல முள்கு' என்பவை நாம் குறித்தபொருளை உறுதிப் படுத்துகின்றன. நெடு நல் வாடை' என்பதை ஆராய்க

ஆதலின் முன்னுளில், எது சரியானதோ அதுவே நல்லதாயிற்று. சரியானது எதுவெனின், மிகைபடாமலுங் குறைவுபடாமலு மிருப்பதே. ஒரே உயரமுடைய இருவர் சரி உயரமுடையவர் எனப்படுவர். 'இது சரியான குதிரை' என்று ஒருவன் சொல்லுவானாகில் அக் குதிரை வளர்ச்சி யிலும் வடிவதிலுந் தன் கருத்திற்கு இசைந்திருக்கின்றது என்ற கருத்துடனே அங்ஙனஞ் சொல்லுகிறன். அவன் ஒரு குதிரையைக் கண்டு 'இது பருத்தது, இது சிறுத்தது, நீண்டது, குறுகியது' என்று சொல்லக் கூடுமாயின் அக் குதிரை சரியான குதிரையன்று ஆகையால் எவ்வகையி லும் பிழைபடாமையே நன்மையாகும்; பொருத்த முடையதே சரியானதாகும் 'இருபது தடக்கை ஒருபது முடியோன்' மகனுகான். 'இவன் மகன்' என்று சொல்வோமாயின், மகன் எனுஞ் சொல்லாற் குறிக்கப் படும் நினைவிற்குச் சரியான பண்பும் அமைப்பும் வாய்ந்தவன் இவன், என்பது பொருள். இன்னும் இதை ஊன்றிப்பார்த்து 'நன்மை' எனுஞ் சொல்லின் முழுப் பொருளையுங் கண்டு கொள்க.

---

## 8. நிலங்களின் தட்பவெப்ப வேற்றுமையால் மொழிநடை மாறல்

மொழிகளின் தோற்ற வளர்ச்சிகளை ஆராயுங்கால் அவை எல்லா நாடுகளிலும் ஏறக்குறைய ஒரே மாதிரி யாகத்தானிருக்கின்றன. உயரம் என்ற சொல், மரம், மலை முதலியவற்றின் மேல்நோக்கிய அளவை முதலில் குறிக்கும் மேல்நோக்கிய அளவு என்ற கருத்திலிருந்து 'உயர்வு' என்ற பண்புப்பெயர் தோன்றி மக்கள் பெரிதும் போற்றத்தகும் தன்மைகள் எவைகளோ அவைகளைக் காட்டாநிற்கும். உயர்ந்தோர் எனப்படுவோர் மேலோர்; உயர்வு, மேல் என்பன ஒருபொருட் பன்மொழிகள். நமது நாட்டில் மலைமுடிகளின்மீது கோவில்கள் கட்டப் பட்டிருப்பதும் இதுபற்றியே. எங்கும் நிறையும் இறைவன், மலையின்மீது மாத்திரம் சிறப்பாய் உறைபவ னல்லன். ஆயினும், கடவுள் உயர விருக்கின்றார் எனுங் கொள்கை மக்களுட் பெரும்பகுதியோருக்குளதாகையால் கோவில்கள் மலைகள்மீதமர்ந்தனவென்க. விவிலியம் (The Bible) எனுங் கிறித்தவ நூலில் பத்துக் கட்டளைகள் என்று பெயர் பெறும் அறமுறை ஒரு மலையின்மீது, ஆண்டவனால் அருளப்பட்டனவென்று எழுதியிருப்ப தையும் கிறித்து மலைமீதமர்ந்து ஒரு சொற்பொழிவு நிகழ்த் தியதாகக் கூறியிருப்பதையும் ஒப்பிட்டு உண்மை யுணர்ந்து கொள்க. ஆங்கிலத்தில், High, Lofty, Elevated, Eminent என்ற கிளவிகளெல்லாம் அடிப்படையாக உயரத்தையே காட்டுவன. High Principles, Lofty Ideals, Elevated Thoughts, Eminent Men என வருவனவற்றை நோக்கின் உயரம் எங்ஙனம் உயர்வாயிற் றென்பது வெளிப்படும். இங்ஙனமே, பள்ளத்தாக்கு, குழி, ஆழம் முதலியவற்றி

னின்றும் தாழ்மை, கீழ்மை என்ற பண்புப் பெயர்கள் பிறக்கும் தாள், தலை யென்பன எல்லா மொழிகளிலும் முறையே பணிவையும் சிறப்பையும் உணர்த்தும். அடியவர் என்ற தமிழ்ச் சொல்லை, To sit at one's feet என்ற ஆங்கிலச் சொற்றொடருடன் தூக்கிப் பார்க்க ஒருவாறு அவற்றின் இயைபு விளங்கும். தலை என்பது சிறப்பை உணர்த்துவதுபற்றித் தாம் இறைவன் தலையி லிருந்து தோன்றியவர்களென்று சொல்லிக்கொள்வாரும் உளர். Captain, Capital என்ற ஆங்கில மொழிகள் தலைமைபற்றி வந்தன. இவை 'கபாலம்' என்ற வட சொல்லுடன் கேண்மையுடையவை. (கபாலம் = தலை) தலைவர் = உயர்ந்தோர்; தலைமை = புலமை உயர்வு.

நிறங்களுள் வெண்மை குற்றமின்மையையும், கருமை குற்ற முண்மையையும், பசுமை இளமையையுங் குறிக்கும். 'பிள்ளைப் பருவத்து வெள்ளை நோக்கு' என்பதிலுள்ள குறிப்பை White-robed Saints என்ற ஆங்கிலத் தொடரில் காணலாம்; பச்சைக் குழந்தை என்பதை A green fellow என்பதோடு ஒப்பிடுக'. "இன்னமுஞ் சொல்லவோ உன் மனங் கல்லோ இரும்போ பெரும்பாறையோ" என்பதன் கருத்து A stony-hearted step-mother, A man of iron will எனும் ஆங்கிலச் சொற்றொடர்களில் அமைந்திருக்கின்றது. இத் தகைய ஒற்றுமைகள் பல.

ஆனல் வையகத்திலுள்ள நாடுகள் தட்ப வெப்பங் களில் வேறுபட்டிருப்பதால் தண்மை, வெம்மை என்ற சொற்கள் நாட்டிற்கேற்ப வெவ்வேறு பொருள்கள் கொள்கின்றன. கார், கூதிர், முன்பனி, பின்பனி, இள வேனில், முதுவேனில், என்று நாம் பிரித்திருக்கும் ஆண்டை, இளவேனில், முதுவேனில், இலையுதிர்பொழுது,

கூதிர் (spring, summer, autumn, winter) என்று ஆங்கிலர் வகுக்கின்றனர். இந்த முறையில் முதுவேனிலை நாம் கருதுகின்றபடி கூதிரை அவர்கள் கருதுகின்றனர் என்பது தெரிகிறது. மேல்நாட்டார் எழுதும் நூல்களில் நிலக்கரி அல்லது விறகு கொண்டு மூட்டப்பட்ட தீ யருகில் தாய் தந்தையர், மக்கள், உறவினர் உட்கார்ந்து படித்தும் பேசியும் களிப்படையும் காட்சியை அடிக்கடி நாம் பார்க்கலாம். இங்ஙனம் தீயின் வெப்பத்தை இனிமையாய் நுகரும் மக்களது உணர்ச்சி நெருப்பைக் கண்டு நடுங்கி விலகும் மக்களது உணர்ச்சியை ஒத்திருக்குமோ ?

நெஞ்சில் ஈரமுடையவனென்று ஒருவனை நாம் கூறினால் அவனுக்கு இரக்கம், ஈகை முதலிய தன்மைகளுண்டென்பது கருத்து. இதே பொருளை ஆங்கிலத்தில் வெளியிட வேண்டுமாயின் 'வெப்ப நெஞ்சுடையவன்' என்றுதான் சொல்லவேண்டும். (He has a warm heart) என்பதை நோக்குக அன்றியும், 'கதிரவன் ஒளியிற் காய்தல்' (To be in the sunshine) என்ற சொற்றொடர் இடுக்கண் இல்லாமையையும் வளமையையும் மேனாட்டாருக்கு உணர்த்தும். அதே கருத்தை நாம் 'நிழலிலிருத்தல்' (To be in the shade) என்ற சொற்களால் வெளியிடுகிறோம்.

> "என்பி லதனை வெயில்போலக் காயுமே
> அன்பி லதனை யறம்"

என்ற குறள் வெப்ப மிகுந்த நாட்டிற்குத் தகுமே யன்றி, ஊதை வீசும் நாடுகளுக்குப் பொருந்தாது. குளிர்ந்த முகம் என்பது நன்மையின் வேறுபட்டதொன்றையும் நமக்கு உணர்த்தாது. ஆங்கிலத்தில் (A cold face) என்றால் அது வெறிப்புக் குறிக்குறியாகும். முகிலெழுந்து விண்ணிற் கூடு

வது நமக்கு உவப்பையே தரும். ஐரோப்பியர்களுக்கோ அஃது இனியதாகாது. ஆதலின் (Clouds) என்ற சொல்லை ஆங்கிலர் 'துன்பம்' என்ற பொருளில் வழங்குகின்றார்கள். இவற்றால் குளிர்ந்த பார்வை, மழைக்கண், திருவடி நிழல், தண்ணருள் ஆகிய இவை தமிழர் பெரிதும் போற்றுவனவாயின. ஆறுதல் என்பது நாம் மிகுதியும் நாடுபவற்றுள் ஒன்று. 'ஆறுதல்' என்றால், சூட்டை இழத்தல் 'சோற்றை ஆற்று' என்று நாம் சொல்வதால் அது விளங்கும். பசி ஆற்றல், இளைப்பாற்றல் என்பவற்றையும் ஒப்பிடுக.

வெப்பமும் தட்பமும் பற்றிவந்த எண்ணங்களால் மக்களுக்குத் தக்கவையுந் தகாதவையும் வரையறுக்கப் படுகின்றன. தீயின் பண்பு சுடுதல். ஆதலின், அதிலிருந்து தீமை என்றொரு சொல்லுண்டாகி மக்களுக்கு இன்னாதவற்றை எல்லாந் தமிழர் அதிலடக்கினர். தீமை எனினும் வெம்மை எனினும் ஒக்கும். வெம்மை—சூடு; ஆனால் வெங்கண், வெய்யகாலன் என வருவனவற்றில் 'சூடு' என்ற முதற்பொருள் சிறிது திரிந்து, கொடுமை என்ற கொள்பொருள் தோன்றி நின்றது. கொடுமை—கோணியதன்மை, செங்கோல், கொடுங்கோல் என்பவற்றாலுணர்க. சுடுவதனா லுண்டாகும் வடுப்போலப் பிறருளம் புண்படும்படி செய்வன, சொல்வன, நினைப்பன யாவும் தீமையே. ஆதலின் மக்கள் உளங்குளிரச் செய்யும் செயல், சொல், நினைவு ஆகிய இவற்றையே தமிழர் நன்னெறி எனக்கொண்டனர். இதையே "எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகல்" என்றார் வள்ளுவனார். இஃதன்றிப் பொருளியல் வகுத்த பெரியோர் ஐம்பகுதியாகிய நிலங்களில் பாலையைப் பிரிதலொடு பொருத்தி

அதற்கு நண்பகலும் முதுவேனிலும், முறையே சிறு பொழுது பெரும் பொழுதென உரைத்தார். அடிசுடும் நிலமும், தீய்ந்த செடிகளும், வாடிய மரமும், நிழலின்மையால் வருந்தும் பறவைகளும் நீர்வேட்கையால் தவிக்கும் விலங்குகளும், கொதிக்கும் பாறைகளும் பிரிவின் தன்மையைக் காட்டுவதற்குக் கருப்பொருளாய் வருவதைப் பாலைக்கலியுள்ளும் பிறவற்றிலுங் காண்க. இவ்வாறு தட்ப வெப்பத்தை யொட்டிப் பிறந்த வேற்றுமைகள் இவ்வையகத்தோடு நில்லாது இறந்த பின் மக்கள் புகும் நிலைமைக்குஞ் சென்றிருக்கின்றன. 'திருவடி நிழல்' என்று நாம் கூறுவதால் இஃது ஒருவாறு விளங்கும். தீமை செய்தவர் தமது தன்மைக் கேற்பத் தீ மிகுந்த விடத்திற் சேர்வர் என்பது பற்றிப் பொல்லார் புகும் இன்னாவிடமாகிய அளறு (நரகம்) கொழுந்துவிட் டெரியும் நெருப்பிற் கிடமாயிற்று. வெப்பநிலத்தவர் கருத்திற்கு இது மிகுதியும் பொருத்தமுடைத்து. ஆனால், சாலவும் குளிருடைய மேனாட்டார் கொள்கையிலும் இத்தகைய கருத்தே இருக்கின்றது. அஃது எவ்வாறு பொருந்தும் எனின், மேனாட்டார் தழுவிய கிறித்தவக் கொள்கையும் வெப்பமிகுந்த பலஸ்தீன் (Palestine) என்னும் நாட்டிற் றோன்றி ஐரோப்பாவிறகுச் சென்ற தாதலால், அது தோன்றிய நாட்டில் , உண்டாகிய எண்ணங்கள் மாறுதலின்றிக் குளிர் நாடுகளுக்குச் சென்றனவென்று கொள்க. கிறித்தவக் கொள்கை ஐரோப்பாவில் தலைநாட்டுதற்கு நெடுநாள் முன்னிருந்த தொல் ஆங்கிலர் (The Anglo Saxon) வெப்பமிகுந்த இடமாக அளறைக் கொள்ளவில்லை. அவர்கள் அதைப் பல் கிடு கிடுக்கக் குளிர்பெருகிப் பனி மூடியிருக்கும் இடமாகவே கொண்டார்களென்பது அறிஞர் கண்ட உண்மை.

தட்ப வெப்பங்களால் பிறக்கின்ற மொழிநடை வேற்றுமைகளை ஒருவாறு ஆராய்ந்து, அவை இம்மை யோடு நில்லாது மறுமைக்குஞ் செல்கின்றன வென்பதைக் கண்டோம். இனி இவ்வாழ்க்கையில் அவற்றால் வரும் ஒழுக்க மாறுதல்களைத் தூக்கிப் பார்ப்போம்.

பெரும்பட்டினங்களில் வாழும் ஒரு சிலரைத் தவிர நமது நாட்டு மக்கள் பொழுது விடியும்போது உறக்கத்தி லாழ்ந்திருப்பவரல்லர். விடிவதற்கு நெடுநேர முன் னெழுந்து வீட்டை விளக்கி மெழுகிக் கலங்களைத் துலக்கி, காலிலுள்ள தண்டைகள் ஓசையிட மாதர் நடமாடுவது நாம் ஒவ்வொரு நாளுங் காணும் காட்சியாகும். பொழுது புலர்வதற்கு முன்னே ஆற்றிலோ ஊற்றிலோ குளித்துப் பூக்கொய்து இறைவனை வணங்குவது நமது மக்கள் பெரிதும் பயிலும் ஒரு பழக்கமாகும். அதனாலன்றோ, கோவிலும் குளமும், நம்மவரால் ஒன்றாகச் சேர்த் தெண்ணப்படுகின்றன? குளிர் நிலங்களில் உள்ளோர் விடியும் வேளையில், அழலைக்கண்டு நாம் அஞ்சுமாறு புனலைக்கண்டு விலகுவார். திருப்பள்ளி எழுச்சியைப் போன்றதொரு பாடல் மேனாட்டார் நூல்களிற் காண்ப தரிது. ஈர உடையுடனிருந்து இறைவனடி ஏத்துதல் அவர் கனவிலுங் கருதாததாகும். அன்றியும், அடிகள் நிலத்திற் படாமல் காத்துக்கொள்ளும் மேனாட்டார், தொழுகையிற் காலிற் செருப்பணிவதை இழுக்கென் றெண்ணார் நாமோ, அதைப் பெருங்குற்றமாகக் கருதி மற்றோரிடத்திற் புகும் போது, செருப்புடன் போகத் துணியோம். குளிர் பொறுக்கமாட்டாது முகந்தவிர மற்றெல்லா உறுப்புக் களையும் மூடிக்கொள்ளுகின்றவர்களுடைய ஆடையணி கள், அவர்களை முகங் குப்புறவிழுந்து வணங்கவும், குனியவும், தரையிலமரவும் ஒட்டா. இதுபற்றியே

மேனாட்டாரும், அவர்கள் வழக்கங்களை ஆராயாது ஆவலாய் ஏற்றுக்கொள்ளும் இந்நாட்டாருந் தொழுகின்ற கோவில்களில் ஒருவருந் தரையிலமர்வதில்லை. இருக்கைகளிற் சாய்ந்துகொண்டு கடவுளைப் போற்றுவது தமிழர் கண்டு இறும்பூதெய்தும் காட்சியாகும்

நிற்க, ஆங்கிலப் புலவரால் இயற்றப்பட்ட உயர் நூல்களில், உளக்கண்ணால் நாம் பார்க்கும் ஆடவர் மகளிரின் தன்மையொன்றை ஆழ்ந்து நோக்கின், தட்ப வெப்பத்தா லாகும் மற்றொரு வேற்றுமை புலனாகும். புலவரது ஆற்றலால் இயற்றப்பட்டு விளங்கும் இம் மக்களின் தன்மையிலிருந்து மேனாட்டார் விரும்புகின்ற மக்கட்டன்மை இதுவென்று நாமறியலாகும் மேனாட்டார் நூலில் காணப்படுகிறவர்களிற் பெரும்பான்மையோர் பொங்கி எழுகின்ற சினத்தாலோ, காதலாலோ, ஆவலாலோ பெருமையாலோ ஏவப்பட்டவர்களாயிருக்கின்றனர். Shakespeare இயற்றிய கூத்துக்களில் முதன்மைபெற்று நிற்பவரெல்லாம் பற்றி எரிகின்ற ஒருணர்ச்சியால் ஆட்கொள்ளப்பட்டு நடக்கின்றார்கள். ஹாம்லெட், ஒதெல்லா, லீயர், மெஅக்பத் (Hamlet, Othello, Lear, Macbeth) முதலியோர் முறையே, இறந்த தந்தைக்காகப் பழிவாங்க வேண்டுமென்ற சினத்தாலும், மனைவி நெறிதவறி நடந்ததாகக் கருதியதை ஆற்றொணாமையாலும், பிள்ளைகளின் கொடிய நன்றியற்ற செய்கையால் எழுந்த புழுக்கத்தினாலும், தான் மன்னவனாகவேண்டுமென்ற பேராவலாலும் மூட்டப்பட்டவர்களாய்க் கொலைசெய்து இறக்கின்றனர். இவ்வாறு கொதித்து எழுந்து பொங்கி வடிவது குளிரால் வருந்தும் இயற்கையுடையார் நச்சுங்காட்சியாகும். இதனாலேயே, ஒரு கூத்தின் தலைவன் தான்கொண்ட உணர்ச்சியின்

வன்மையால் தூண்டப்பட்டு இறக்குங் காட்சியை இறுதியினுடைய துன்பக்கூத்து (Tragedy) மேனாடுகளில் மிகவும் பெருகி வளரலாயிற்று நம்மவர்கட்கு, இத் தகைய ஆட்டங்களில் விருப்பமிருப்பதில்லை. எவ்வளவு தான் எரிமூண்ட உளத்தோடு ஒருவன் வெட்டி வீசி இன்னாத பல செய்யினும், இறுதியில் அவன் ஆறுதல் பெற்றுக் குளிர்ந்திருப்பதையே நம்மவர் நாடுகின்றார். அரிச்சந்திரன் வரலாற்றைக் கூத்து முறையில் மேனாட்டுப் புலவன் எழுதுவானாயின், மகன் இறந்தபின் மனைவியைக் கொன்று அயோத்தி மன்னன் தன்னையே வெட்டிக் கொண்டு விழுவதுடன் நிறுத்திவிடுவான்; நல்லதங்கையின் வரலாறும் அவள் தன் மக்கள் எழுவரோடுங் கிணற்றில் விழுந்து உயிர்துறப்பதுடன் முடிவடைந்துவிடும். நாமோ இவர்களெல்லாரும் உயிர்பெற்று அமைதியாய் வாழ்வதைக் காண விழைகின்றோம் மேனாட்டாருடைய துன்பக் கூத்தை யொருவாறு ஒத்திருக்குங் கோவலன் செய்தியும் ஆங்கிலப் புலவர் கருத்திற்கிசையாது நாம் கற்பதுங் கேட்பதுமாகிய எல்லாவற்றிலும், நல்லவர் வாழ்வதையும் தீயவர் தாழ்வதையும் எதிர்பார்க்கின்றோம். குளிர் நாட் டாருடைய நூல்களிலும், இத்தகைய முடிவு உண்டு; ஆயினும், அவர்கள் பெரிதும் விழைகின்ற நூல்கள் துன்பக்கூத்தை யொத்தனவே இதன் நன்மை தீமைகளை நேயர்கள் ஆராய்ந்தறிந்து கொள்வார்களாக

ஞாயிற்றின் வெப்பம் மலிந்திருக்கும் நிலங்களில் மக்களுடைய முயற்சி எளிதில் எழுந்து அடங்கிவிடும். பகல் முப்பது நாழிகையும் விடாமல் வேலைசெய்து உழைப்பவரை நம்மவரிற் காண்பதரிது. தட்ப நாடு களிலோ, நாளுக்கு நாறபத்தைந்து நாழிகைக்குமேல் உழைப்பவருளரென்று தெரிகிறது. காங்கை மிகுந்த

நிலங்களில் உணவளிக்கும் பயிர் முதலியவை மக்களது சிறுமுயற்சியால் அவர்கட்கு வேண்டிய பயனைத் தருகின்றன. உறைபனி மூடியிருக்கும் நாடுகளிலோ மிகுந்த வருத்தத்தோடு உழைத்தாலும் ஏற்ற பயன் கிடைப்பதில்லை. அன்றியும், குளிரின் மிகுதியால் இடுக்கணுற்றவர் சூடுண்டாக்கிக் கொள்ளும் பொருட்டு, யாதாயினுமொன்று செய்ய வேண்டியதா யிருக்கிறது. ஒன்றுஞ் செய்யாது வாளாவிருந்தால், குரக்குவலி முதலிய வற்றால் அவர் துன்புறுவர். இதனால் உடல் தளராமல் நெடுநேரம் உழைப்பது அவர்கட்கு இயற்கையாய் வருகிறது. தாம் கொண்ட நோக்கங் கைகூடாமற் போயினும் சிறிதும் பலமுறை முயன்று பார்ப்பது அவர்களுக்கு இயற்கையாகிவிட்டது ஆதலால், விடா முயற்சி என்ற உயர்பண்பு அவர்களில் நம்மிலும் அதிக மாயுளது. இதற்கிணையாக வெப்ப நிலத்தோரிடம் ஒரு பண்புண்டு. வெயிலில் நின்று நெடுநேரம் வேலைசெய்வதால் வெப்ப நிலத்தவருடைய வன்மை குறைபுமாயினும், அவர் தமக்கு இன்னாதவற்றைப் பொறுத்துக் கொள்ளுந் திறமை யுடையவரா யிருக்கின்றா. இங்ஙனமே தட்பத்தால் வரும் இடையூறுகளை அவர்கள் முயன்று முயன்று மேற்கொள்ள, நாம் வெப்பத்தால் வருந் தீங்குகளைத் தாங்கிக்கொள்ளும் ஆற்றலுடையவர்களா யிருக்கின்றோம். இதுபற்றி மேனாட்டார் விடாமுயற்சியைக் கைப்பற்றியவர் களாகவும், நாம் பொறுமையைக் கடைப்பிடித்தவர் களாகவும் விளங்குகின்றோம்.

வெப்பம் மிகுந்துள்ள நிலங்களில் உணவுப் பொருள்கள் விரைவில வளர்ந்து பயன்தருமென்று முன் கூறப்பட்டது இதை இன்னும் சற்று ஆழ்ந்து நோக்கில், சூடு சாலவுமுடைய நாடுகளில் மரம் செடி கொடிகள்

கடிதில் முளைத்து வளர்ந்து அழிவது புலப்படும். சூட்டின் மிகுதியால் பூ பிஞ்சாதலும், பிஞ்சு காயாதலும், காய் கனியாதலும் கடிதில் நிகழ்கின்றன. தோன்றல், திரிதல், கெடுதலாகிய நிகழ்ச்சிகள் எந்நேரமும் நாம் வழக்கமாய்ப் பார்க்கும் காட்சிகளாகும் மக்களுக்குள்ளும் பிள்ளை நிலைமையிலிருந்து இளமையும் முதுமையும் விரைவில் வருகின்றன தட்ப நாட்டுப் பெண்கள் நன்மையடையும் வயதைச் சூட்டு நில மகளிர் நன்மை எய்தும் வயதோடு சீர் தூக்கிப் பாரத்தால் இஃது எளிதிற் றெளிவாகும். பிள்ளைத் தன்மை நீங்கு முன்னரே குழந்தை பெறும் பெண்களை நமது நாட்டில் ஆங்கிலர் கண்டு வியப்படைகின்றனர். இங்ஙனம், மண நிகழ்ச்சியும் பிள்ளைப் பேறும் கடிதில் நடக்கின்றமையால் மூப்பும் நரையும் முடுகி வருகின்றன. ஆங்கிலர் முப்பது அல்லது முப்பத்தைந்து வயதாகிய பின்னர் மணஞ்செய்து கொள்வதைப் பார்ப்பது நமக்கு வியப்பாயிருக்கிறது. முப்பது நாற்பது வயதில் நம்மிற் பலர் மணந்து மக்களைப்பெற்று மூப்பெய்தி மாண்டுபோகின்றனர்.

இங்கிலாந்தில் பிறக்கும் குழந்தைகளுக்குள் நூற்றுக்குப் பத்துக்குமேல் சாவதில்லை; இந்தியாவில் நமது சென்னைப் பகுதியில் நூற்றுக்கு முப்பது விழுக்காடு குழந்தைகள் இறந்துபோகின்றன. இது குறைந்த கணக்கு. இந்தியாவின் வேறு பகுதியில் இதைவிட அதிகமாய்க் குழவிகள் மாள்கின்றன. யாதுபற்றி இவ்வாறு நடக்கின்றதென்பதை நாம் ஆராய வேண்டியதில்லை. மக்களின் அறிவின்மையாலும், தாயின் உடல் வளர்ச்சிக்கு வேண்டிய உணவின்மையாலும் இவ்வாறு நேருகிறதென்று கருதப்படுகிறது. இஃதெவ்வா றிருப்பினும், நமது மக்கள் அடிக்கடி சாவைக் காண்கின்றார்க

ளென்பது மாத்திரம் நாம் இங்கு அறியவேண்டியது. மக்களின் சராசரி வயது நமது நாட்டில் இருபத்தைந்திறகுக் குறைந்தது இங்கிலாந்தில் அது நாற்பத்தைந்திற்கு உயர்ந்தது. இவற்றால் பொதுவாக நமது மக்கள் 'உலகம் நிலையாமை' என்பதை அடிக்கடி உணர வேண்டியதாகின்றது. நமது இலக்கண இலக்கியங்களிலும், பழக்க வழக்கங்களிலும் நிலையாமையைப்பற்றி எப்போதும் நினைப்பூட்டப்படுகின்றோம். ஆதலின், நமது நாட்டில் எழுதப்பட்ட நூல்களில் பெரும்பான்மை, உலகில காணப்படும் பொருள்களைப்பற்றிய ஆராய்ச்சி செய்யாமல் உடல், உயிர, கடவுள் என்ற மூன்றின் தொடர்பை உற்றுநோக்கி விரித்துக் கூறுகின்றன. நாம் காணும் யாவும் நிலையில்லாப் பொருள்களானதால் இவறறினின்றும் விலகி, என்றும் அழியாதிருக்கும் நிலைமை யாதென வினவி அறிந்து, அதை ஊக்ததேதோடு தொடர்வதையே தொன்றுளிலிருந்து இந்நாள்வரை நாம் பெரிதும் பாராட்டுகிறோம்.

இம்மைக்குஅடுத்தவற்றில் மேனாட்டார் மிகவும் ஊன்றி நின்று உழைத்து வெற்றியுடன் விளங்குகின்றனர். வையகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் அவர்கள் சென்று செல்வமும் ஆட்சியும் தேடிக்கொண்டனா. தட்ப நாட்டார்க்கு ஆராய்ச்சி முறையில் முடிவென்பது கிடையாது. தங்கள் முன்னோர்கள் தேடிய அறிவையும் செல்வத்தையும் வளர்த்துப் பெருக்க அவர்கள் இடையறு முயற்சி செய்கின்றனர் இதில் அவர்கள் எவ்வளவு உயர்வெய்தித் திகழ்கின்றனர் என்பதை நாமிங் கெடுத்துக் கூறவேண்டியதில்லை எடுததற்கெல்லாம் ஊழ் என்று சொல்லி வாளா விருப்பது நம்மவரிற் பெரும்பாலோர் இயற்கையாகும். ஊழ் என்பது ஒன்று உண்டென்பது

பலருமறிந்த உண்மையாயினும் ஒருவனது முயற்சி எப்போது ஊழால் தடுக்கப்படுகிறது என்று ஒருவராலும் சொல்லொணுது. ஊழை நினைந்து உளமுண்டந்து செயலற்றிருப்பது விளக்கமும் உறுதியும் அற்றோர் செயலேயாகும். அன்றியும், முயற்சியால் ஊழையும் மேறகொள்ளலாம் என்று நூல்களில் பெரியோர்களால் எடுத்துக் காட்டப் பட்டிருப்பதையும் நாம் கருத்திற் கொள்ளல் வேண்டும் ஆதலின், உள்பொரு ளாராய்ச்சியில் ஒப்பில்லா உயர் வெய்திய நம்மவர், மேல்நாட்டார் மிகப் பயின்றுவரும் இம்மைக்குரிய பொருளாராய்ச்சிகளில் முன்னினும் அதிகமாக முயலல்வேண்டும். தட்ப நாட்டார துறவு போன்ற வாழ்க்கையைக் கைப்பற்றியபோதும் செயல் ஒடுங்குதலின்றி ஒழுகுகின்ருர் ; வெப்பநாட்டார் இளமை யிலேயே துறவுநிலையில் விருப்பமுற்றுச் செயலற்றிருக்க அவாவுகின்ருர். சில ஆண்டுகட்குமுன் அமெரிக்காவி லுள்ள ஹார்வட் கல்லூரியில் பெரும்புலவராயிருந்த ஜேம்ஸ் என்பவர், தாமெழுதிய ஒரு நூலில் "இந்தியாவி லுள்ள பிள்ளைகள், ஒரு நாளில் ஒன்று அல்லது இரண்டு மணி நேரம் ஓரிடத்தில் செயலின்றிச் சும்மாவிருக்கக் கற்பிக்கப்படுகிருர்கள் ; அவ்விதப் பயிற்சி அமெரிக்கப் பிள்ளைகளுக்குக் கொடுக்கப்பட்டால் சால நலமாயிருக்கும்" என்று எழுதியிருக்கிருர். நாமறிந்த அளவில் நமது நாட்டில் பிள்ளைகள் இவ்வாறு பயிற்றப்படுவதைக் கண்ட தில்லை. ஆயினும் பொதுவாக உள்ளத்தையடக்கி வினை யின்றி வாளாவிருக்கும் மக்கள் இந்தியாவில் பெருந் தொகையினர் உளர் என்பதை ஒத்துக்கொள்ளலாம். இங்ஙனமே மேல்நாடுகளில் அல்லும் பகலும் ஓய்வின்றி உழைத்து நேரத்தைப் பணமாகக் கருதும் மக்கள் மிகுதியு முளர். அவர்கள் அமைதியின்றி ஓடித் திரிந்து உழல்

வதைக்கண்டு, மேல் நாம் கண்ட புலவர் வாளாவிருப்பதன் பெருமையை எடுத்துக்காட்டு முகத்தான் மேற்காட்டிய வாறு புகன்றார்.

இதுகாறும் யாம் எழுதியவற்றில் நிலங்களின் தட்ப வெப்ப வேற்றுமையால் எங்ஙனம் மொழியிலும் நடையிலும் உடையிலும் கொள்கையிலும் வழக்கத்திலும் மாறுதல்கள் தோன்றுகின்றன என்பது ஒருவாறு காட்டப்பட்டது யாம் கூறியது பொதுவாக உண்மையே ஆயினும், மக்களின் உரத்தாலும் முயற்சியாலும் ஆக்கப் பெறும் செயல்களுக்கு அளவேயில்லை. பெரிய நோக்கங் களும் தூய எண்ணங்களும் உறுதியுள்ள மக்களின் உளத்திற் புகுந்தால் தட்ப வெப்பத்தாலும் பிறவற்றாலும் வரும் தடைகள் அவர்களை என் செய்யும்?

---

# 9. யதார்த்தவாதி உலகவிரோதி

'யதார்த்தவாதி உலகவிரோதி' என்பது ஒரு கிழமொழி; அதாவது கிழவர்கள் சொல்லுகின்ற மொழி. இதையே பழமொழி என்றுஞ் சொல்லுவார்கள். பழமொழி என்றால் பழுதத மொழி என்றாவது, பழைய காலத்து மொழி என்றாவது பொருள் செய்துகொள்ளலாம். பழைய காலம் என்று சொல்லும்போது நெடு நாட்களுக்கு முந்திய காலம் என்று நினைக்கவேண்டியதில்லை. ஒருநாள் ஆக்கிய சோற்றைத் தண்ணீரில் போட்டு மறுநாள் உண்ணும்போது அது, 'பழையது' ஆகிவிடுகிறது. ஆகையால், 'நான் பழையது சாப்பிட்டேன்" என்று சொல்லும் வழக்கத்தை நிறுத்திவிட்டுப் பெரும்பாலோர் புதியது சாப்பிட ஆரம்பித்துவிட்டார்கள். இது நிற்க

"யதார்த்தவாதி உலகவிரோதி" என்று சொல்லிக்கொண்டு நான் ஒரு தெருவழியே போய்கொண்டிருந்தேன். அங்கே சுமார் நாற்பது வயதுடைய ஓர் அம்மாள் வீட்டுவாசலில் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களுக்கு முன்னம்பல் இரண்டு மிக நீண்டு, சிவந்த கீழ் உதட்டில் பதிந்து இருந்தன. பல் வெள்ளையாகவும், உதடு சிவப்பாகவுமிருந்ததைப் பார்த்தவுடன் எனக்கு ஓர் எண்ணம் உண்டானது. செவ்வாய்க்கும் வெள்ளிக்கும் இடையில் புதனும் வியாழனும் வரவேண்டியிருக்க, அது தவறிச் செவ்வாயும் வெள்ளியும் இந்த அம்மாளுடைய முகத்தில் ஒன்றாகக் கூடியிருக்கிற விந்தையைச் சொன்னால் ஒருவரும் நமபமாட்டார்கள் என்று என் மனத்தில் தோன்றிற்று. நான் ஒரு புலவனாயிருந்தால் இதைப்பற்றி இனிய கவி ஒன்று பாடி, அதைச் செல்வமுடையவர்களிடத்தில் சொல்லிக் கொஞ்சம் பொருள் சம்பாதித்துக்

